

# திருக்கோயில்

"என் கடன் பணி செய்து கிடப்பதே"



காந்தியடிகள்

தோற்றம் : 2-10-1869

மறைவு : 30-1-1948

மாலை 12] சௌமிய-புரட்டாசி-அக்டோபர் 1969 [மணி 1

தமிழ் நாடு அரசின் அறநிலைய
ஆட்சித்துறை வெளியீடு.



தஞ்சை மாவட்டம் நாகை வட்டம் திருக்கோளிலி ( திருக்குவளை ) ஸ்ரீ அங்காள பரமேசுவரி திருக்கோயிலும், அதைச்சார்ந்த ஸ்ரீ பெரியாச்சி முதலிய பரிவாரங்களின் திருக்கோயிலும், எல்லாவகையிலும் சிறந் முறையில் புதியதாகச் செய்யப்பெற்று, 15-9-1969 திங்கட்கிழமை காலை 10 மணிக்குமேல் 11 மணிக்குள் பெருஞ்சாந்தி விழா (மகா கும்பாபிஷேகம்) மிகச் சிறப்பாக நடைபெற்றது.

## பொருளடக்கம்



## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

ஆண்டுச் சந்தா ரூ. 10/-

தனி இதழ் விலை ரூ. ஒன்று

'திருக்கோயில்' இதழின் சந்தாதாரர்கள் ஆகச் சேர விரும்புபவர்கள் ''திரு. ஆணையர் அவர்கள், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34'' என்னும் முகவரிக்கு ரூபா பத்து அனுப்பி எப்போது வேண்டுமாயினும் சந்தாதாரர்கள் ஆகச் சேர்ந்து கொள்ளலாம்.

அல்லது, அவ்வவ் வட்டார அறநிலைய் உதவி ஆணையாளர்களின் அலுவலகங்களிலும், மேற்படி சந்தாத் தொகையைச் செலுத்திச் சேரலாம்.

சந்தாதாரர்கள் தங்களுடைய சரியான முழு முகவரியைத் தெரிவித்துதவுதல், இதழ்கள் தவறுமற் சேர்தற்கு மிகவும் இன்றியமையாதது.

—ஆசிரியர்




மாலை 12] சௌமிய-புரட்டாசி-அக்டோபர், 1969 [மணி 1



# திருவள்ளுவரும் காந்தியடிகளும்

**முன்னுரை :**

திருவள்ளுவர் இற்றைக்கு 2000 ஆண்டுகளுக்கு முற்பட்டவர். காந்தியடிகள் சென்ற நூற்றாண்டில் தோன்றியவர் (2—10—1869). ஆயினும் திருவள்ளுவருக்கும் காந்தியடிகளுக்கும் இடையே 'சான்றோர் சான்றோர் பாலர் ஆவர்' என்னும் முறையில் பலதிற நெருங்கிய ஒற்றுமை ஒப்புமை இயைபுகள் உள்ளன.

## (1) உலகப் பெரும் சான்றோர் :

திருவள்ளுவர் உலகப் பெருங்கவிஞர்களுள் ஒருவர் : காந்தியடிகள் உலகப் பெரும் சான்றோர்களுள் ஒருவர். கடந்த காலத்தில் இருந்த எல்லாப் பெரியோர்களையும்விடக் காந்தியடிகள் மிகப்பெரியவராக விளங்கினர். அவர் ஆல்பிரெட், வாலெஸ், வாஷிங்டன், கோஷியஸ்கோ, லேஃபயட் போன்ற தேசியத் தலைவராகவும்; கிளார்க்சன், வில்ஃபர் ஃபோர்ஸ், காரிசன், ஆபிரகாம் லிங்கன் போன்ற விடுதலை இயக்க வீரராகவும்; செயிண்ட் பிரான்ஸிஸ், டேவிட் தோரே, :லியோ டால்ஸ்டாய் போன்ற குணப் பெருஞ் சான்றோராகவும்; லாவோட்சே, புத்தர் சுவராஸ்டர் இயேசுபோன்ற சமயஞானச் செல்வராகவும் ஒப்புயர்வற்றுத் திகழ்ந்தார். (John H. Holmes) செயலில் தயோஜெனிஸ், பணிவில் ஃபிரான்ஸிஸ், அறிவில் சாக்ரடீஸ் எனப் புகழும்படியெல்லாம் காந்தியடிகள் பெருஞ்சிறப்புற்று விளங்கினர் (Francis Nielson).

## (2) சமயப் பொது நோக்கு :

திருவள்ளுவர் ஒரு பெரிய ஞானி; காந்தியடிகள் ஒப்புயர்வற்ற ஓர் உத்தமர். திருவள்ளுவர் எல்லாச் சமயத்தவர்க்கும் பொதுவானவர்; காந்தியடிகள் எல்லாச் சமயங்களையும் பொது நோக்குடன் போற்றி ஒழுகியவர். 'சநாதன இந்து' என்றே தம்மைச் சுட்டிக் கொண்டாலும், கிறித்தவம் இஸ்லாமியம் யூதம் பார்சியம் முதலிய சமயங்களையும் அவர் பெரிதும் மதித்து விரும்பிப் போற்றினர். அவரது பிரார்த்தனைக் கூட்டங்களில் கீதையும் கொரானும் விவிலியமும் பிறவும் மிக்க பக்தியுணர்வுடன் ஓதப்பெற்றன. இராமனும் இரஹீமும் அவருக்கு ஒருவரே. கிறித்துவையும் கிருஷ்ணனையும் அவர்வேறு பிரித்துக் கருதவில்லை. சமயசமரச நோக்கமும் ஒழுக்கமும் திருவள்ளுவரைப் போலவே காந்தியடிகள் மாட்டும் இருந்தன.

(3) அழியாப் புகழ் :

திருவள்ளுவர் வாழ்ந்து இரண்டாயிரம் ஆண்டுகளாகியும், அவர்தம் சீரும் சிறப்பும் மேலும் மேலும் பெருகி வருகின்றன. எத்தனையோ பல நூற்றாண்டுகளாக, எத்தனையோ பல கோடி மக்களுக்கு உணர்ச்சியூட்டும் வழிகாட்டியாக அவர் விளங்கி வருகின்றார். அது போலவே, காந்தியடிகளும் அடிமைத் துயிலில் ஆழ்ந்து உறங்கிக் கிடந்த 300 கோடி இந்திய மக்களைத் தட்டி எழுப்பினார். "இரண்டாயிரம் ஆண்டுகளாக இல்லாதமுறையில் ஆற்றல் மிக்க ஒரு மாபெரும் இயக்கத்தைத் தோற்றுவித்தருளினார்."



திருவள்ளுவரின் புகழைப் போலவே காந்தியடிகளின் புகழும் இன்னும் எத்தனையோ பல்லூழிகாலம் உலகில் பரவிப் பெருகி நின்று நிலவி வளரும்.

(4) செயற்கரிய செய்வார் :

திருவள்ளுவர் திருக்குறள் என்னும் செயற்கரிய நூலைச் செய்தார். அவ்வாறே காந்தியடிகளும் தமது வாழ்க்கையில் செயற்கரிய பல பெரும் செயல்களைச் செய்து நிறைவேற்றினர். 'செயற்கரிய செய்வார் பெரியர்' 'பெருமை உடையவர் ஆற்றுவார், ஆற்றின் அருமை உடைய செயல்' 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்பன போல வரும் திருவள்ளுவரின் திருக்குறள்களுக்குக் காந்தியடிகள் மிகச்சிறந்த இலக்கியமாகத் திகழ்கின்றார். 'ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே செல்லும்வா யெல்லாம் செயல்' எனத் திருவள்ளுவர் செப்பியபடி அறவினைகளை ஒல்லும் வகையானெல்லாம், செல்லும் இடத்தெல்லாம் ஓவாது செய்து வாழ்ந்தவர் காந்தியடிகள். 'செயற்பாலது ஒரும் அறனே ; உயற்பாலது ஒரும் பழி'' என்று திருவள்ளுவர் விதித்த நெறிமுறை கடவாது காந்தியடிகள் தம் வாழ்க்கையை நடத்தினர். 'அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை ; விடல்வேண்டும் வேண்டிய எல்லாம் ஒருங்கு' எனப் பணித்த திருவள்ளுவரின் கட்டளையை முழுவதாக நிறைவேற்ற முயன்றவர் காந்தியடிகளே யாவர். 'துன்பம் உறவரினும் செய்க, துணிவாற்றி இன்பம் பயக்கும் வினை' எனத் திருவள்ளுவர் கூறிய அறிவுரையினைப் பெரிதும் போற்றி,

இதம்தரு மனையின் நீங்கி
இடர்மிகு சிறைப் பட்டாலும்,
பதம்திரு இரண்டும் மாறிப்
பழிமிகுந் திழிவுற் றாலும்,
விதந்தரு கோடி இன்னல்
விளைந்தெனை அழித்திட் டாலும்,
சுதந்திர தேவி! நின்னைத்
தொழுதிடல் மறக்கி லேனே.

எனப் பாரதியார் பாடினாற்போல, அருட்டிரு காந்தியடிகளும் இன்னல்கள் எத்தனைவரினும் மனம் தளராது இந்திய நாட்டின் விடுதலைக்காகப் பெரிதும் முயன்றார்.

(5) வாழ்க்கைத் துணை நலம் :

திருவள்ளுவர், தமது திருக்குறளில் 'வாழ்க்கைத் துணை நலம்' என்னும் பகுதியில் வகுத்தருளிய இலக்கணத்திற்கேற்ப வாசுகி அம்மை என்னும் மாட்சிமைமிக்க மனைவியைப் பெற்றிருந்தார் என்பது வரலாறு. அவ்வாறே காந்தியடிகளும் உயரிய உத்தம நற்குணங்கள் அனைத்தும் ஒருங்கே நிறைந்து திகழ்ந்திருந்த அன்னை கஸ்தூரிபாயை அரும்பெறல் வாழ்க்கைத் துணைவியாக வாய்க்கப் பெற்றார். அவரிடம் இருந்தே அகிம்சை பற்றிய அரிய பாடத்தினைத் தாம் கற்றுக்கொண்டதாகக் காந்தியடிகள் குறிப்பிட்டுள்ளார். வாசுகி அம்மையும் அன்னை கஸ்தூரிபாவும் தம் கொழுநரைத் தெய்வம் எனத் தொழுதவர்கள்; கொழுநரின் குறிப்பறிந்து சிறப்புற ஒழுகியவர்கள்; கணவருக்குப் பணிவிடைகள் செய்து களித்தவர்கள் ; கணவரின் வாழ்வியற் கடமைகளில்தாமும் பங்கு கொண்டு, பக்கபலமாகக் கைகொடுத்து இணைபிரியாது துணை நின்றவர்கள். 'பெற்றாற் பெறிற் பெறுவர், பெண்டிர் பெருஞ் சிறப்புப் புத்தேளிர் வாழும் உலகு' என்னும் திருக்குறளுக்கு இலக்கியமான வர்கள். இவ்விருவரையும் முறையே தமக்குரிய

["Gandhi has raised up 300 millions of his fellow men, shaken the British empire and inanguarated in human politics the most powerful movement that the world has seen for nearly 2000 years"]

—Romain Roleand

"I barnt the lesson of non-violence from my wife, when I tried to bend her to my will and in the end she became my teacher in non-violence."

—Mahatma Gandh

மணைவியராகப் பெற்றமை, திருவள்ளுவருக்கும் காந்தியடிகளுக்கும் மிக்க சிறப்பை விளைவித்தது எனலாம்.

## (6) உழவும் நெசவும் :

திருவள்ளுவர் உழவுத் தொழிலை மிகவும் உயர்ந்த தொன்றாகப் புகழ்ந்துரைத்தார். 'செய்யும் தொழிலனைத்தும் சீர் தூக்கிப் பார்க்குங்கால் நெய்யும் தொழிற்கு நிகரில்லை' எனத் தெளிந்து நெசவுத் தொழிலைக் கைக்கொண்டார். அது போலவே காந்தியடிகளும், தம்மை ஒரு நெசவாளர் என்றும் உழவர் என்றும் (Weaver and Peasant) குறிப்பிட்டுக் கொள்ளும் வழக்கம் உடையவராக இருந்தார். 'இராட்டை (சர்க்கா) ஒழுக்கத்தைக் காக்கின்றது ; உணவு அளிக்கிறது ; சோம்பலைப் போக்குகின்றது. மனத்தை ஒருமைப்படுத்துகின்றது.' 'இராட்டையினின்று நூற்கும் ஒவ்வோர் இழையிலும் நான் கடவுளைக் காண்கின்றேன்' என்றெல்லாம் காந்தியடிகள் கூறுவர். 'உழைத்துப் பெறும் உணவு மிக எளிதாயினும், அதுவே மிக இனியதும் உயர்ந்ததும் ஆகும்' என்பது திருவள்ளுவர் கருத்து. அதனைத் 'தெண்ணீர் அடுபுற்கை ஆயினும், தாள்தந்தது உண்ணலின் ஊங்கினியதில்' 'தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடி கைவாளாண்மை போலக்கெடும்' என்னும் திருக்குறள்கள் உணர்த்தும். இவ்வாறே காந்தியடிகளும் உழைப்பின் உயர்வு (Dignity of labour) எத்தகையது என்பதனை உலகுக்குப் பல்லாற்றானும் உணர்த்தியருளினர். செருப்புத் தைத்தல், கழிப்பறை துப்புரவு செய்தல் முதலிய பணிகளையும் காந்தியடிகள் செய்தமை கருதுதற்குரியது.

## (7) புரட்சியாளர் :

திருவள்ளுவர் ஒரு பெரிய புரட்சியாளரும் சீர்திருத்தச் செம்மலும் ஆவர். அவர்தம் கருத்துக்களில் பல புரட்சிமணம் கமழ்வனவாக உள்ளன. இன்பம் பொருள் அறன் என்றிருந்த முறையினை 'அறம் பொருள் இன்பம்' என்று மாற்றியமைத்துப் புரட்சி செய்தவர் திருவள்ளுவர். களவு செய்தல், கள் அருந்துதல், சூதாடுதல், புலாலுண்ணல், பிறன்மனை விழைதல், வரைவின் மகளிர்ப் புணர்தல் முதலிய பல குற்றங்களைக் கடிந்து உலகத்தைச் சீர் திருத்த முற்பட்டவர் திருவள்ளுவர். காந்தியடிகளும் இந்திய நாட்டு அரசியலில் ஒரு பெரிய புரட்சியையும் மிகப்பல சீர்திருத்தங்களையும் நிகழ்த்தினர். கத்தியின்றி இரத்தமின்றிச் சத்தியத்தைத் துணைக் கொண்டு, காந்தியடிகள் யுத்தம் நடத்தினர். சத்தியாக்கிரகம் என்னும் அறம்போர், நிகழ்வதற்கு அவரே முதன் முதலில் வழிவகுத்தார். தீண்டாமை ஒழிப்பு மதுவிலக்கு போன்ற சீர்திருத்தத் திட்டங்களை வற்புறுத்தி நடைமுறைக்குக் கொண்டு வந்தார் தமது ஆக்கப்பணியாகப் பொருளியலில் கதருடை இயக்கத்தையும், சமுதாய இயலில் தீண்டாமை ஒழிப்பையும், ஒழுக்க இயலில் மதுவிலக்கையும் அடிகளார் அரிதின் ஆய்ந்து வகுத்தார்.

## (8) இன்னா செய்யாமை :

நாம் எந்த உயிர்க்கும் எப்போதும் மனத்தினாலும், ஒரு சிறிய தீங்கும் செய்தல் கூடாது என்பது திருவள்ளுவரின் அருளுரை. 'எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும் மாணா செய்யாமை' ஆகிய இரண்டையும், தவத்தின் இலக்கணமாகத் திருவள்ளுவர் வற்புறுத்தினர். இங்ஙனம் 'இன்னா செய்யாமை' எனத் திருவள்ளுவர் விளக்கியருளிய நெறியினையே காந்தியடிகள் தம் வாழ்விற் கடைப்பிடித்து ஒழுகி, உலகிற்கு வழிகாட்டினர். 'அகிம்சை என்பது ஓர் அரும்பெரும் கொள்கை நெறி. அதனை முதன் முதலாகக் கண்ட இந்திய ஞானிகள் நியூட்டனைவிட மிகச் சிறந்த மேதைகள் ; வெல்லிங்டனைவிட மிகப்பெரிய வீரர்கள்.

அகிம்சையும் சத்தியமும் சத்தியாக்கிரகிகளின் இன்றியமையாத பண்புகளாகும். இயேசுபிரான் இவ்விரண்டையும் இயல்பாகப் பெற்ற தலைசிறந்த சத்தியாக்கிரகி ஆவார்' என்றெல்லாம்

---

I am a reformer through and through. But my zeal never leads me to the rejection of the essetial things of Hinduism''

—Mahatma Gandhi

(6) ''I often describe my religion as religion of Truth. Of late, instead of saying God is Truth, I have been saying Truth is God, in order more fully to define my religion. Nothing so completely describes my God as Truth. Denial of God we have known. Denial of Truth we have not known. Hence the definition : 'Truth is God' gives me the greatest satisfaction.''

—Mahatma Gandhi

காந்தியடிகள் திருவள்ளுவர் அருளிய 'இன்னு செய்யாமை' என்னும் பண்பிற்கு அரிய விளக்கங் களைச் செய்தருளி உள்ளார்.

## (9) வாய்மை :

திருவள்ளுவர் வாய்மை அல்லது சத்தியம் என்பதனைப் பெரிதும் போற்றினர். சத்தியத் தைப்போல நல்லது, யான் ஆராய்ந்து கண்டன வற்றுள் வேறுபிறிது எதுவுமே இல்லை என்று, சத்தியத்தின் தன்னிகரற்ற மேன்மையினை, அவர் பறைசாற்றினர். 'யாம் மெய்யாக் கண்ட வற்றுள் இல்லை எனைத்தொன்றும் வாய்மையின் நல்லபிற' என்பது திருவள்ளுவர் உலகுக்கு விடுத்த ஞானச்செய்தி. இவ்வாறே, காந்தி அடிகளும் சத்தியத்தையே தமது உயிர்நிலைக் கொள்கையாகத் தேர்ந்து கொண்டு உறுதி யாகக் கடைப்பிடித்து ஒழுகினர். 'நான் அவ் வப்போது என்னுடைய சமயம், சத்திய சமயம் என்று கூறிவந்திருக்கின்றேன். ஆயினும் சில காலமாகக் கடவுள் உண்மையாக இருக்கின்ருர் என்பதற்குப் பதிலாக, உண்மையே கடவுளாக விளங்குகின்றது என்று சொல்லத் தலைப்பட்டிருக் கின்றேன். என்னுடைய சமயத்தினை இன்ன தென்று மிகவும் தெளிவாகக் கூறி விளக்குதற் பொருட்டே இங்ஙனம் யான் சொல்ல முற்பட் டுள்ளேன். உண்மையைவிட உயர்ந்த சமயம் வேறெதுவும் இல்லை.' இங்ஙனம் உண்மையின் உணர்வை உள்ளபடி உணர்ந்து போற்றுதலில் திருவள்ளுவரும் காந்தியடிகளும் தலைசிறந்து திகழ்கின்றனர்.

எவன்தன் உள்ளச்சான்றுக்குப் பொய்யாமல் உள்ளபடி நல்லவனுக நடக்கின்ருனே, அவன் உலகத்தார் உள்ளங்களிலெல்லாம் இடம் பெற்றுச் சிறப்புற்று விளங்குவான் எனத் திரு வள்ளுவர் செவ்விதின் ஆராய்ந்த தெளிவுற மொழிந்தார். 'உள்ளத்தாற் பொய்யாது ஒழுகின், உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உளன்' என்பது திருக்குறள். திருவள்ளுவர் அருளிச் செய்த உண்மையினைக் காந்தியடி களின் விழுமிய வாழ்வே நமக்குக் கவின்மிக விளக்கி நன்கினிது மெய்ப்பித்துக் காட்டியது. 'புகழ்மிக்க சிறந்த பெரியோர்கள் பலர் வெண் கலத்திலும் சலவைக்கல்லிலும் நினைவுச்சிலைகள் பல அமைக்கப்பெற்றுள்ளனர். ஆனல் தெய் விக ஒளிபெற்ற இம்மனிதரோ தம்முடைய வாழ் நாளிலேயே உலகம் எங்கணும் உள்ள பல கோடிக்கணக்கான மனிதர்களின் உள்ளங்களில் நிலையான இடம்பெற்று நிகரற்று விளங்குகின்ருர்' என ஜவகர்லால்நேரு அவர்கள் காந்தியடிகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளவை இங்கு நாம் நினைத்து மகிழத்தக்கது.

## (10) புலால் மறுத்தல் :

திருவள்ளுவர் காலத்தில் மிகப் பெரும்பா லான மக்கள் புலாலுணவை உட்கொள்ளும்வழக் கம் உடையவராக இருந்துகொண்டிருந்தனர். அதனைக் கடிந்து புலாலுண்ணுதல் புன்மை என அறிவுறுத்தி மறுத்தருளியவர் திருவள்ளுவர். இத்துறையிலும் காந்தியடிகள் திருவள்ளுவரின் அடிச்சுவட்டைப் பின்பற்றியிருத்தல் கருதுதற் குரியது. காந்தியடிகள் இங்கிலாந்து சென்று கல்விகற்கச் சென்ற காலம் முதல் பற்பல இடர்ப் பாடுகளுக்கிடையேயும் மிகதியன்று புலால் உண்ணுதலை அறவே வெறுத்து ஒழுகிவந்தமை, நம்மனேர் உணரற்பாலது. மனத்தூய்மை பெறு தற்கு விழையும் ஒருவன், புலால் உணவை அறவே விடுத்துத் தூய உணவையே மேற் கொள்ளுதல் வேண்டும் என்பது காந்தியடி களின் உறுதியான கொள்கை. இதன் பயனுக வே அவர் உணவுத்துறையில் பல்வேறு சோதனைகளை இடைவிடாது நிகழ்த்திக் கொண் டிருந்தார். நூல்களும் கட்டுரைகளும் வெளி யிட்டு வந்தார். இங்கிலாந்தில் மாணவராக இருந்த பொழுதே சைவ உணவுச் சங்கத்தின ருடன் தொடர்புகொண்டு பெரிதும் தொண் டாற்றினர். ஒருவன் தன் பொறிபுலன்களை அடக்கி நல்வழிப்படுதல் வேண்டும் என்னும் விருப்பம் உடையவனுயின், நாவின் சுவைக்காக எதனையும் உண்ணுதல் கூடாது. உடல் நலத் திற்காக உணவேயன்றி, நாவின் சுவைக்காக உணவு தேடுதல் கூடாது. உணவும் உணர்வும் தொடர்புடையன. உணவு நல்லதாயின் உணர் வும் நல்லதாக அமையும். உணவு தீயதாயின் உணர்வும் தீயதாக மாறும். நாவை அடக்கு பவன் பொறிபுலன்களை அடக்குவான். புலன் களை அடக்கியவன் உலகத்தையே அடக்கி ஆள்வான்' என்றெல்லாம் காந்தியடிகள் கட்டு ரைத்துள்ளார். இவ்வாற்ருல் 'யாகாவாராயி னும் நாகாக்க' எனவரும் திருவள்ளுவரின் திருக் குறளுக்குக் காந்தியடிகள், மிகச் சிறந்த புதிய கருத்து விளக்கம் புரிந்துள்ளார் எனலாம்.

---

"Great and eminent men have monuments in bronze and marble set up for them but this man of divine fire managed in his life time to become enmeshed in millions and millions of hearts"

## (11) கற்றலும் நிற்றலும் :

திருவள்ளுவர் கல்வியின் சிறப்பைப் பெரிதும் வலியுறுத்தி விளக்கினர். கற்பதன் முதன்மை, கற்கும் முறைமை, கற்கத்தகும் நூல்கள், கற்பதன்பயன் என்பன பலவற்றையும், ஒரே குறளில் அவர் ஒருங்கே தொகுத்துணர்த்தினர். கற்பது முதன்மை, அதனைவிடக் கற்றதற்குத் தக்கபடி நிற்பது முதன்மை, எனத் திருவள்ளுவர் கட்டுரைத்தார். 'கற்க கசடறக் கற்பவை ; கற்ற பின் நிற்க அதற்குத் தக' என்பது திருக்குறள். இதனைக் காந்தியடிகள் இனிது பின் பற்றினர் எனலாம். பகவத் கீதை, துளசிதாசரின் இராமாயணம் முதலிய கற்கத் தகும் நூல்கள், பலவற்றையும் அவர் கற்ருர். கற்றவழி சற்றும் பிறழாது நின்ருர். கற்ற நூல்களின் வழி நிற்றலின் வாயிலாகத் தமது வாழ்க்கையையே மாற்றியமைத்து வளமுடையதாக்கிக் கொண்டார். டால்ஸ்டாய் எழுதிய 'கடவுளின் அரசு உன் உள்ளத்தில் உள்ளது'(The Kingdom of God is With in you); டேவிட் தோரே எழுதிய கொடுங் கோன்மைக்குக் கீழ்ப்படியாமை' (Civil Disobedience) ; ஜான்ரஸ்கின் எழுதிய 'கடையருக்கும் விடுதலை' (Unto This Last) என்னும் நூல்கள், அவர் தம் வாழ்க்கையிற் பெருமாறுதல்களை உண்டாக்கின. சமயத்துறையில் டால்ஸ்டாயின் நூலும், அரசியல் துறையில் டேவிட் தோரேயின் நூலும், பொருளியல் துறையில் ஜான்ரஸ்கின் என்பவரது நூலும், காந்தியடிகளின் கொள்கைநெறிக் கருத்துக்களை உருவாக்கின. 'கற்க, கற்றபின் நிற்க அதற்குத் தக' என்னும் திருவள்ளுவரின் கட்டளையைக் காந்தியடிகள் முழுதாக நிறைவேற்றியருளினர் எனலாம்.

## (12) கடவுளுணர்வு :

திருவள்ளுவர் கற்றதனுலாய பயன், இறைவனின் நற்ருள் தொழலே என்றும் ; தனக்குவமை இல்லாதான் தாள் சேர்தலே மனக் கவலைகளை மாற்றும் வழி என்றும் அறிவுறுத்தினர். காந்தியடிகள் இத்தகைய கடவுளுணர்ச்சியில் மிகவும் தலைசிறந்திருந்தார். 'எனது தேசபக்தி என்னுடைய சமயத்திற்குக் கீழ்ப் பணிந்து செல்வதே ஆகும்' (My patriotism is subservient to my Religion) என்று, அவர் அருளிச் செய்தார். கடவுளன்பில் அவர் மிகவும் தலைசிறந்து விளங்கினர். 'காற்றும் நீரும் இன்றிக்கூட நான் உயிர்வாழ்வேன்; ஆனல் கடவுளின் நினைவு இன்றி வாழ என்ருல் ஒரு சிறிதும் இயலாது. நீங்கள் என் கண்களைப்பறித்து விடலாம். என் மூக்கினை அறுத்து விடலாம். இவைகள் சற்றும் என்னைக் கொன்று விட மாட்டா. ஆனல் இறைவனிடத்து எனக்கு உள்ள நம்பிக்கையை மட்டும் நீங்கள் போக்குவீர்களாயின், அப்பொழுதே யான் இறந்தொழிந்து போவேன். இறைவனின் உண்மையில் எனக்குள்ள உறுதியானது இமயமலையைப் போல அசைக்க முடியாததாகவும், அதன் கொடுமுடிகளில் உள்ள பனிப்படலங்களைப் போலத் தூயதாய்த் தெளிவாகவும் உள்ளது. கடவுளுணர்ச்சி மட்டும் எனக்கு இல்லாமற் போயிருந்தால், யான் எப்போதோ கிறுக்குப் பிடித்த பித்தனகி விட்டிருப்பேன்' என்பது காந்தியடிகளின் கனிவுரை.

## (13) காட்சிக்கு எளிமை :

திருவள்ளுவர் காட்சிக்கு எளியவர், இனியவர். அங்ஙனமே காந்தியடிகளும் ஆகுலம் மிக்க ஆடையணி வகைகளை அறவே வெறுத்தொழித்தார். மிகவும் எளிய ஏழை உழவன் ஒருவன், உடுக்கும் நான்கு முழத்துணியையே அவர் உடுக்க முற்பட்டார். பக்கிங்காம் அரண்மனையில் ஐந்தாம் ஜார்ஜ் அரசரையும், அரசியாரையும் காணச்சென்ற போதும், மிக எளிய உடையிலேயே அடிகளார் சென்ருர். காலில் மிதியடியும், இடுப்பில் நான்குமுழத் துண்டும், மேலே ஒரு வெள்ளைப் போர்வையும் தவிர, அவர் வேறு எதனையும் அணியவில்லை. 'ஈது என்ன?' என நண்பர் ஒருவர் வினவியதற்கு, 'எனக்கும் சேர்த்துத்தான் மிக ஏராளமான ஆடைஅணி வகைகளை, மாட்சிமைமிக்க அரசரும் அரசியாரும் அணிந்துகொண்டு வந்துள்ளனரே' என அடிகளார் மறுமொழி நவின்ருர். 'மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல்? பிறப்பறுக்கல் உற்ருர்க்கு உடம்பும் மிகை' என்ற திருவள்ளுவரின் கருத்தையே, காந்தியடிகளும் கொண்டிருந்தார். எளிய உடையிலும்கூட, அவர் அரசர்களுக்கெல்லாம் அரசர்போல இணையற்று விளங்கினர். (Kingliest of all kings)

வட்டமேசை மாநாட்டிற்குச் சென்றபோது, அரண்மனை போன்ற எத்தனையோ விடுதிகள், அடிகளார்க்காகக் காத்திருந்த போதிலும், இலண்டன் மாநகரின் கிழக்கு மூலையிலுள்ள கிங்ஸ்லி ஹால் என்னும் தொழிலாளர்களுக்

குரிய எளிய விடுதியிலேயே, ஒரு சிய அறையில் மகிழ்ச்சியுடன் தங்கினர். அனைவருக்கும் காட்சிக்கு எளியராக விளங்கிய, கடவுட்டன்மை உடையவராகவும் திகழ்ந்தார். எவரிடமும் எந்தக் காலத்திலும் அவர் கடுஞ்சொற்பேசியதே இல்லை. (He never spoke a harsh word to any one). 'இடுக்கண் வருங்கால் நகுக' என்று திருவள்ளுவர் அருளிச் செய்தபடி, எத்தனை இடுக்கணும் தொல்லையும் நெருக்கடிகளும் நேர்ந்தாலும், அவர் தம் திருமுகத்தில் எப்போதும் புன்முறுவல் பூத்துப் பொலிந்திருந்தது ('His tender face never lost its benign and bewitching smile').

## (14) நடைமுறை யுணர்வு,

திருவள்ளுவர் வெறும்நீதி நூலாசியர் மட்டும் அல்லர். நீதி நூலாசிரியர்களிற் பலர் குறிக்கோளாளராக இருப்பரே அன்றி, நடைமுறை அறிவுத்திறன் ஒரு சிறிதேனும் உடையவர்களாக இரார். ஆனல் திருவள்ளுவரோ அத்தகையவர் அல்லர். அவர் நடைமுறை அறிவுத்திறனில் நன்கினிது தேர்ந்த ஒரு பெருங் குறிக்கோளாளர். 'தென்புலத்தார் தெய்வம் விருந்து...' என்னும் குறளில், ஒருவன்தான் உளனய் நின்றே எல்லா அறங்களையும் செய்ய வேண்டுதலின், தன்னை ஓம்பிக்கொள்ளுதலையும்கூட, ஒரு சிறந்த அறமாக விதித்திருத்தல் ஒன்று கொண்டே, திருவள்ளுவரின் நடைமுறை அறிவுத்திறனை நாம், செவ்விதின் தெளிந்து கொள்ளலாம். 'பொய்ம்மையும் வாய்மை இடத்த' என அவர் அருளிச்செய்த திருக்குறளும் இவ்வுண்மைக்குச் சான்றுபகரும். காந்தியடிகளும் இத்தகைய ஒரு பெரும் நடைமுறையியற் குறிக்கோளாளரே யாவர் ('I am not a visionary. I claim to be a practical idealist'). அறிஞர்கள் பற்பலரும் தம் அறிவினல் ஆராய்ந்து, அறிவிற்கு ஒவ்வாதனவும், நடைமுறைக்கு இயையாதனவும் ஆகும் என மறுத்து, மயங்கித் தடுமாறிய திட்டங்கள் பலவற்றை வகுத்துக் காந்தியடிகள் திறம்படச் செயற்படுத்திக் காட்டித், தமது நுண்மாண் நுழைபுலத்தைப் பல காற் புலப்படுத்தியுள்ளார். காந்தியடிகளின் அரும்பெரும் தொண்டின் திறனலேயே, இந்திய மக்கள் சிறிதும் எதிர்பாராத நிலையிலும், இந்தியாவிற்குச் சுதந்திரம் எளிதிற் கிடைத்து விடுவதாயிற்று.

## (15) ஒழுக்கத்தின் விழுப்பம் :

திருவள்ளுவர் தமது திருக்குறளில் ஒழுக்கத்தையே பெரிதும் வற்புறுத்தினர். ஒழுக்கம் விழுப்பம் தரலான், அதனை நாம் உயிரினும் மேலானதாக மதித்துக் காத்தல் வேண்டும் எனப் பலரித்தார். உலக நூலாசிரியர்களுள், திருவள்ளுவரைப் போல ஒழுக்கத்தை மிகமிக வற்புறுத்தியவர் வேறு எவருமே இல்லை எனலாம். அறிஞர்களிற் பலர், அரசியலுக்கும் தனிமனிதனின் ஒழுக்கத்திற்கும் எத்தகைய தொடர்பும் இல்லையென்றே, எத்துணையோ நெடுங்காலமாகக் கருதியும் கூறியும் வந்தனர். ஆனல் காந்தியடிகளோ, மனித வாழ்வின் எல்லாத் துறைகளிலும் ஒழுக்கம் மிகமிக இன்றியமையாதது என வலியுறுத்தினர். திருவள்ளுவர் மனம் மொழி மெய் என்னும் மூன்றின் உண்மையையும் பெரிதும் வற்புறுத்தினர். காந்தியடிகள் அவர்தம் அடிச்சுவட்டைப் பின் பற்றி, அங்ஙனமே வாழ்ந்து காட்டினர்.

## (16) வாழ்க்கைக் கலை :

திருவள்ளுவர் ஒரு பெரும் கவிஞர், தலை சிறந்த கலைஞர்! காந்தியடிகள் கவிஞர் அல்லர் எனினும், அவரது வாழ்க்கை ஒரு சிறந்த அரும் பெரும் கவிதையாகவே அமைந்து திகழ்ந்தது. ஒருவகையிற் காந்தியடிகளைச் சிறந்த பெருங் கலைஞரே ஆவர்என நாம் துணிந்து கூறலாம். 'வாழ்க்கையின் தூய்மையே உண்மையான உயர்ந்த கலையாகும். பயிற்சி அளிக்கப் பெற்ற குரலினின்று நல்ல இசையை வெளிப்படுத்தும் திறனைப் பலரும் எளிதிற் பெற முடியும். ஆனல் வாழ்வின் தூய்மைமையிலும் ஒருமையிலும் இருந்து, தெய்வீக மயமான ஓர் உயரிய இசையை எழுப்பிப் பரப்புதல், எளிதில் இயல்வதொன்றன்று'. 'காந்தியடிகளின் பலவகைச் செயல்களும், முற்போக்கான எழில் மிக்க நல்லிசைப் பாடலாகவே விளங்குவனவாயின. அவர் பேசிய ஒவ்வொரு சொல்லும், ஆவர் நிகழ்த்திய ஒவ்வொரு உறுப்பசைவும், அந் நல்லிசைப்பாடலுக்கு மிகவும் பொருந்திய இனிமை பயந்தன. தம்மை அறியாமலே ஒரு முழுநிறைவான பெருங் கலைஞராகப் பிறங்கினர் அவர்! வாழ்க்கையை நடத்துவது எங்ஙனம்? என்னும் கலையை, அவர் சிறப்புறக் கற்றுப்பழகித் தேர்ச்சிபெற்று விளங்கினர். உண்மையும் நன்மையும் அவர் தம் வாழ்வியற் கலையைப் பெரிதும் சிறந்தோங்கி மிளிரச் செய்தன. அதனல் அவர் அமர்ந்த இடம் கோயில் ஆயிற்று; நடந்த நிலம் புனிதம் அடைந்தது.

திருவள்ளுவர் வாழ்க்கைக் கலைக்கு இலக்கணம் வகுத்தார். காந்தியடிகள் வாழ்க்கையைக் கலையாக வாழ்ந்து காட்டினார்.

## (17) உயிராற்றல் :

திருவள்ளுவர் தமது திருக்குறளில், படைமாட்சி படைச்செருக்கு என்னும் இரண்டு தலைப்புக்களை வகுத்துள்ளனராயினும், வெறும் படையாற்றலைக் காட்டிலும், பண்புநலம் மிக்க உயிராற்றல் (Soul-force) தான், எல்லாவற்றையும் விட வலிமை வாய்ந்தது, என்பதனைச் செவ்விதின் உணர்ந்திருந்தார். வாளை எடுத்தவன் வாளாலேயே மடிவான். படைபலத்தைவிட ஆன்மபலமே மேலானது. 'படைகொண்டார் நெஞ்சம் நன்று ஊக்காது, என்பது அவர்தம் துணிவு. திருவள்ளுவர் உயிராற்றலின் உயர்வையும் சிறப்பையும் மிகச் செவ்வையாக உணர்ந்திருந்தவர். 'ஐந்தவித்தான் ஆற்றல் அகல் விசும்புளார் கோமான் இந்திரனே சாலும் கரி', 'ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும் எண்ணில் தவத்தான் வரும்' என்னும் குறள்களால் உயிராற்றலின் ஒப்புயர்வற்ற மேன்மையைத் திருவள்ளுவர் உணர்த்தியிருத்தல் காணலாம்.

திருவள்ளுவரின் செந்நெறியைப் பின்பற்றியே, காந்தியடிகளும் உயிராற்றல் அல்லது ஆன்மபலத்தின் மேன்மையினைப் பெரிதும் உணர்ந்து விளக்கிப் பரப்பினர். 'ஆன்மபலத்தைப் பயன்படுத்தி அறப்போர் நிகழ்த்தும் சத்தியாக்கிரகிகள், முழுப்பிரமச்சரியம் கடைப்பிடித்தல் வேண்டும். வறுமையை வலிந்து ஏற்றல் வேண்டும்; உண்மையையே பின்பற்ற வேண்டும்; அஞ்சாமையைப் பயிலுதல் வேண்டும். கடவுளுக்கு அஞ்சுகிறவன் வேறு மனிதர் எவர்க்கும் அஞ்சத் தேவையில்லை' என அறிவுறுத்தி வந்தார். திருக்குறளும் 'அஞ்சாமை யல்லால் துணை வேண்டா' எனக் கூறியிருத்தல் கருதற்பாலது. ஆன்ம பலத்தின் மேன்மையைக் காந்தியடிகள், தாம் பெரிதும் போற்றி வழிபட்ட இராம பிரானின் வரலாற்றுத் தத்துவ நுட்பத்தைக் கொண்டே, பின்வருமாறு விளக்குகின்றார். 'இராமன் வெறும் மனிதன்; அவன் துணையாகக் கொண்டவைகளோ குரங்கின் திரள்கள்; அவனது பகைவனாகிய இராவணனோ, அசுரபலம் கொண்டவன்; பத்துத் தலைகளை உடையவன். அவனது இலங்கை மாநகரமோ, நாற்புறமும் கொந்தளிக்கின்ற கடல் சூழ்ந்தது; வலிமையான மதிற்பாதுகாப்புக்களை உடையது. இத்தகைய வலிமை மிகுந்த இராவணனை, இராமபிரான் வெற்றி பெற்றதனால், உடலாற்றலைவிட உயிராற்றலே எவ்வாற்றாலும் மேலானது, என்பது புலனாகின்றதன்றோ? என்றெல்லாம் காந்தியடிகள் உணர்த்தியருள்கின்றார்.

## (18) இன்னா செய்தார்க்கும் நன்னயம் :

திருவள்ளுவர், தீங்கு செய்பவர்க்கும் நாம் நன்மையே செய்தல் வேண்டும்; அங்ஙனம் செய்யாதவழி, நம்முடைய, சால்புடைமையினால் யாது பயன்? என்கின்றார். 'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு?' என்பது திருக்குறள். காந்தியடிகள், திருவள்ளுவரினுடைய திருக்குறளை அடியொற்றி ஒழுகினார். தமக்குத் தீங்கு செய்தவர்களை யெல்லாம் மன்னித்தார்; தம்மைத் தாக்கியவர்களையெல்லாம் பொறுத்தருளினார். அவர்களின் மீது நடவடிக்கைகள் எடுப்பதற்கு அறவே மறுத்து விட்டார். தம்மீது குண்டுவீசிய (*20—1—1948*) அறிவற்ற இளைஞனையும், எவ்வகையாலும் ஒருசிறிதும் கொடுமைப் படுத்துதல் ஆகாது என்றும், அவனைத் திருத்தி நல்வழிப் படுத்தவே முயலவேண்டும் என்றும், காவல் துறைத் தலைவரைக் காந்தியடிகள் வேண்டிக் கொண்டதை நாம் அறிவோம்.

தன்னரிய திருமேனி
சதைப்புண்டு தவிப்பெய்திப்
பன்னரிய பெரும்பாடு
படும்போதும், 'பரிந்தெந்தாய்!

---

"All his manifold activities be came progressively a symphony, and everyword he spoke and every guesture that he made fitted into this and so unconsciously he became the perfect artist, for he had learnt and mastered the art of living..Where he sat became a temple and where he trod was hallowed ground."
—Nehru

(9) "What is the meaning of Rama, a mere human being, with his host of monkeys, pitting himself against the insolent strength of ten-headed Ravana, surrounded in supposed safety by the raging waters on all sides of Lanka. Does it not mean the conquest of physical might by spiritual strength?"
—Mahatma Gandhi,
To Every Englishman, 1920

இன்னதென அறியகிலார்
  தாம்செய்வது ; இவர்பிழையை
மன்னியும்'என் றெழிற்கனிவாய்
  மலர்ந்தார்நம் அருள்வள்ளல் !

—இரட்சணிய யாத்திரிகம்

எனத் தம்மைச் சிலுவையில் அறைந்தவர்களை யும் மன்னித்தருளுமாறு, இயேசுபிரான் இறைவன்பால் வேண்டிக் கொண்டதனை நினைவூட்டும் வகையில், காந்தியடிகளின் செயலும் அமைந்திருந்தமை காணலாம்.

## (19) சான்றாண்மை :

தென்னப்பிரிக்காவில் தம்மைச் சிறையில அடைத்த ஜெனரல் ஸ்மட்ஸ் அவர்களையும் காந்தியடிகள் பெரிதும் நேசித்தார். தமது ஆன்ம பலத்தால் அவருடைய படைபலத்தை வெற்றி கொண்டார். தாம் விதித்த நிபந்தனைகளையெல்லாம் அவர் ஏற்றுக்கொண்டு உடன்படுமாறு செய்தார். அரசியலில் மாறுபட்டாலும், அடிகளாரின் அகிம்சை அருளியலுக்கு ஜெனரல் ஸ்மட்ஸ் அவர்கள் அடிபணிந்தார். அவர் இறுதிவரையில் அடிகளார்பால் மிக்க தோழமைத் தொடர்பே கொண்டிருந்தார். காந்தியடிகள் மறைந்த பொழுது, 'இத்தகைய சிறந்த சான்றோர்பால் யான் அப்போதும்கூட மிக உயரிய மதிப்புக் கொண்டிருந்தேன். ஆயினும், என்னுடைய தலைவிதி அவருக்கு மாறுபட்டு நிற்க வேண்டிய நிலையில் அமைந்து விட்டது'[9] என அவர் கழிவிரக்கம் கொண்டு புகழ்ந்து போற்றிப் பாராட்டியிருத்தல், நினைந்து மகிழத்தக்கது. நியட்ஸ்கி என்னும் தத்துவப் பேராசியர், 'ஒரே ஒரு உண்மைக் கிருத்தவர் தான் இருந்தார். அவரும் சிலுவையில் இறந்து விட்டார்' என ஒரு சமயம் நுண்ணிதின் வியந்து குறிப்பிட்டார். காந்தியடிகள் தேசநலத்திற்காகத் தமது உயிரையே தியாகம் செய்ய நேர்ந்ததனைக் கண்டிருந்தால், அவர் தம்முடைய கூற்றைச் சிறிது மாற்றித் திருத்தியமைத்துக் கொண்டிருப்பார் எனலாம். தேசநலத்திற்காக உடல் பொருள் ஆவி என்னும் மூன்றையும் ஒப்படைத்து, இறுதியில் ஒரு புனித உயிர்த் துறவி (Martyr) ஆகவும், காந்தியடிகள் பெரும்பேறு பெற்றார். 'நத்தம் போற் கேடும் உளதாகும் சாக்காடும் வித்தகர்க் கல்லால் அரிது' என்னும் திருக்குறளுக்குக் காந்தியடிகளே சிறந்த எடுத்துக் காட்டாவர் எனலாம்.

## முடிவுரை :

இங்ஙனம் திருவள்ளுவருக்கும் காந்தியடிகளுக்கும் இடையே, எத்துணையோ பல ஒப்புமை இயைபுகள் உண்டு. இவ்விரு பெருமக்களையும் நாம் நம்முடைய வாழ்க்கைக்குரிய வழிகாட்டிகளும் அருளாசிரியர்களுமாகக் கொண்டு, வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து, உய்ய முயலுவோமாக. வாழ்க வள்ளுவம்! வளர்க காந்தியம்!!

—ஆசிரியர்

---

"It was my fate to be antagonist of a man for whom even then I had the highest respect." J. C. Smuts.

(10) "Nietzche uttered once the piercing paradox, 'There has been only one Christian and he died on the Cross'. Perhaps if the frenzied philosopher had lived long enough to observe the manner of life of his other guru, he would have qualifed his celebrated quip."

—Lewelyn Powys



# அத்துவைத தத்துவ ஆசாரியர்கள்

## முன்னுரை :

நமது இந்திய நாட்டில், குறிப்பாக இந்து மதத்தில் தோன்றியுள்ள தத்துவக் கொள்கைகள் பலவற்றுள், அத்துவைத தத்துவக்கொள்கையும் ஒன்று. அது பழமை வாய்ந்தது; இந்தியாவின் பல பகுதிகளிலும், பல மொழிகளிலும் பரவியிருப்பது. இதனில் இருந்தே கேவலாத்துவைதம் (சங்கரர்), விசிட்டாத்துவைதம் (இராமாநுசர்), துவைதம் (மத்துவாசாரியர்), சைவ சித்தாந்தம் (மெய்கண்டார்), துவைதாத்துவைதம் (நிம்பார்க்கர்), சுத்தாத்துவைதம் (வல்லபர்), அசிந்தியாபேதாபேதம் (சைதன்னியர்), சிவ விசிட்டாத்துவைதம் (ஸ்ரீகண்டர்), சிவாத்துவைதம் (அப்பைய தீட்சிதர்), என்னும் பல்வேறு கொள்கைகளும் தோன்றுவனவாயின.

மேலும், இந்து மதத்தின்கண் உள்ள ஏனைய பிற தத்துவக் கொள்கைகளைவிட, அயல் நாடுகளில் ஓரளவு அதிகமாக அறியப் பெற்று விளங்குவதும், அத்துவைத தத்துவமேயாகும். எல்லாப் பொருள்களுக்கும் முதலில் தோன்றியது தண்ணீர் (Thales) ; எல்லாப் பொருள்களிலும் ஏதோ ஒருவகைத் தெய்வீக ஆற்றல் ஊடுருவித் திகழ்கின்றது (Heraclitus) ; மனித உயிர் விலங்குடல்களினின்று பல பிறவிகளைப் பெற்றுப் படிமுறையே உயர்ந்து வருகின்றது (Pythogoras, Plato) ; நிலம், நீர், நெருப்பு, வளி ,விசும்பு என்னும் ஐந்து கூறுகளால் உலகம் அமைந்துள்ளது (Aristotle); ஊனுணவு உட்கொள்ளுதல் அருவருக்குத் தக்கது (Empedocles); எனப் பண்டைக் கிரேக்க நாட்டுச் சான்றோர்கள் பலர் கூறியிருக்கும் கொள்கைகள், நமது இந்திய நாட்டுத் தத்துவக் கொள்கைகளை, அவர்கள்ஓரளவேனும் அறிந்திருந்தமைக்குச் சான்று பகர்கின்றன. பிளாட்டினஸ் (Plotinus), காண்ட் (Kant), பெர்க்சன் (Bergson), பிராட்லி (F. H. Bradley) போன்ற மேலைநாட்டுத் தத்துவ அறிஞர்களின் கருத்துக்கள் பல, அத்துவைதக் கொள்கையுடன் ஒப்புமையுடையனவாகக் காணப்படுகின்றன.



இன்னோரன்ன பல சிறப்புக்களையுடைய அத்துவைத தத்துவக் கொள்கையை ஆராய்ந்து விளக்கியருளிய ஆசாரியர்கள் பற்றி அறிந்து கொள்ளுதல், நமக்குக் கடமையும் நலம் பயப்பதும் ஆகும். ஆதலின் அதுபற்றி ஈண்டு இயன்றவரை சுருக்கமாகக் காண்போம்.

## (1) வசிட்டர் :

பிரம்மாவின் மானச புத்திரர். காயத்திரி மந்திரம் ஓதும்போது நாடோறும் தியானிக்கப்படும் அத்திரி, பிருகு, குத்சர், கௌதமர், காசியபர், ஆங்கீரசர் என்னும் முனிவர்களில் ஒருவர். வாம தேவர், ஜாபாலி, காசியபர், ஆங்கீரசர், காத்தியாயனர், சுயஜ்ஞர், கௌதமர் விஜயர் என்னும் முனிவர்களோடு சேர்ந்து, இராமபிரானுக்கு முடி சூட்டியவர். ‘வசிட்டனே புனைந்தான் மவுலி’ என்பது கம்பராமாயணம். இராமபிரானுக்கு முடி சூட்டியதோடு மட்டுமின்றி, உபதேசமும் புரிந்தவர் இவர். அவ்வுபதேசமே “யோக வாசிட்டம்” என்னும் நூலாக அமைந்துள்ளது. அது வான்மீகி ராமாயணத்திலும் அளவாற் பெரியது. வைராக்கியப் படலம், முமுட்சுத்துவப் படலம், உற்பத்திப் படலம், ஸ்திதிப் படலம், உபாசனைப் படலம் என்னும் பிரிவுகளையுடையது.

“உலகம் முழுவதும் பரமாத்மாவுடன் ஒன்றியுள்ளது. பிரம்மம் என்பது பராகாசம். அவரை வழிபடுவது நலம்பயக்கும். அவரில் இருந்தே எல்லாம் வருகின்றன. அவரே எல்லாம் படைக்கின்றார். எல்லாம் அவரில் இருக்கின்றன. அவர் எவராலும் படைக்கப்பட்டவர் அல்லர். ஆதியும் அந்தமும் அவருக்கு இல்லை. அவர்

சமானம் அற்றவர் ; பிரிக்கப்படாதவர் ; பிரிக்க இயலாதவர். அவர் நிறைவானவர். அவரின் வேருன வேறு எவராலும் அவர் உண்டாரவ தில்லை. அவரிடம் இருந்தே நாம் எல்லா நலன் களையும் அடைகின்ரேம்'' என்றெல்லாம், வசிட் டர் அறிவுறுத்தியுள்ளார்.

(2) சக்தி :

வசிட்ட முனிவருக்கு அருந்ததியாகிய மனைவியின்பாற் பிறந்த நூறு புதல்வர்களில் மூத்தவர். கல்மாஷபாதன் என்பவன், இவரைக் கண்ட மாத்திரத்திலேயே, தன்பாவமும் சாப மும் நீங்கப் பெற்ருன் என்பது வரலாறு. விசு வாமித்திரர் அனுப்பிய ருதிரன் என்னும் அசு ரனுல், இவர் கொல்லப்பட்டார்.

(3) பராசரர் :

இவர் சக்தியின் புதல்வர். சாக்தேயன் என்பது இவர் தம் இயற்பெயர். புலத்திய முனி வர் இவரது கல்விநலமும் தவவொழுக்கமும் கண்டு வியந்து, 'பராசரர்' என்னும் பெயரை அளித்து, இவரை வாழ்த்தி மகிழ்ந்தார். அவர் பணித்தருளியபடியே, இவர் விஷ்ணுபுராணம் இயற்றினர். பராசரர் என்பதற்குப் பகைவருக்கு அம்பைப் போன்றவர் என்பது பொருள்.

''விஷ்ணு மாயாரூபி, அவருக்கு இயல்பாக உருவம் இல்லையாயினும், உலக நலத்துக்காக உருவம் கொள்கின்ருர் ; பல அணிகலன்களைத் தரிக்கின்ருர். விஷ்ணு என்பது ஞானம். இலட்சுமி என்பது சக்தி. அவருக்கு உலகம் கௌஸ்துபம்; பிரகிருதி ஸ்ரீ வத்சம்; புத்தி கதாயுதம் ; பஞ்சபூதம் சங்கு ; இந்திரியம் வில் ; மனம் சக்கரம்; பொறிகள் அம்பு ; வித்தை வாள் ; அவித்தை உறை ; அவர் யாண்டும் நீக்கமற நிறைந்திருப்பதனுல் விஷ்ணு எனப்படுகின்ருர்.''

இங்ஙனமெல்லாம் விஷ்ணு தத்துவத்தை விளக்கியருளும் பராசரர், ''புழுவாய்ப் பிறக்கினும் நின்னை யான் மறக்கலாகாது. மற்றவர்களுக்கு உலகப் பொருள்கள் மேற் செல்லும் விருப்பம் போல், எனக்கு நின்பால் விருப்பமும் ஈடுபாடும் இயல்பாக நிகழ்தல் வேண்டும்'' என்று, தமது திருவுள்ளக் கருத்தையே பிரகலாதரின் வேண்டு கோட் கூற்ருக வெளியிடுகின்ருர். இவர் அருளி யது பராசர ஸ்மிருதி.

(4) வியாசர் :

பராசர முனிவர்க்கும், பரிமளகந்தி எனப் பெயர்பெற்ற சத்தியவதி என்னும் செம்படவப் பெண்ணுக்கும் மைந்தராகத் தோன்றியவர். பராசரரும் பரிமளகந்தியும் கண்டு காதலித்த அளவில், உடனே தோன்றியதனுல் சத்யோத் பந்நர் ; ஒரு தீவிற் பிறந்தமையால் துவைபாய னர் ; கரிய நிறம் உடையவராக இருந்ததனுல் கிருஷ்ணர் ; வதரி (இலந்தை) மரத்தின் கீழ் இருந்து தவம் புரிந்ததனுல் வாதராயணர் ; வேதங்களைத் தொகுத்து முறைப்படுத்தியதனுல் வேதவியாசர் முதலிய பெயர்கள் இவருக்கு வழங்குவனவாயின.

இவர் நான்கு வேதங்களையும் முறையே பிலர், வைசம்பாயனர், ஜைமினி, சுமந்து ஆகிய வர்கட்கு உபதேசித்தார். ஐந்தாம் வேதம் என் னும் மகாபாரதம், பதினெண் புராணங்கள், வியா சஸ்மிருதி ஆகியவற்றையும் இவரே அருளிச் செய்தார். இவர் இயற்றிய பிரம்ம சூத்திரம் 4 பாகங்களும், 555 சூத்திரங்களும் கொண்டது. அத்துவைத தத்துவ சாத்திர ஆராய்ச்சிகள் அனைத்திற்கும், அடிப்படையும் மூலமுமாக அமைந்தது, பிரம்ம சூத்திரம் என்னும் இந் நூலேயாகும். விஷ்ணு சகஸ்ரநாமம், சிவ சகஸ்ர நாமம் என்பனவும் இவர் செய்தனவே. உலகப் புகழ்பெற்ற பகவத் கீதை, விதுரநீதி, யட்சப் பிரச்சினம், அனுசாசனபர்வம் முதலியன இவர் அருளிச் செய்த மகாபாரதத்தின் உட்பகுதி களாக அமைந்து விளங்குகின்றன. இன்னே ரன்ன செய்திகளால் இவர்தம் அருமை பெரு மைகள், யாவர்க்கும் இனிது புலனுகும்.

(5) சுகர் :

இவர் வியாசரின் புதல்வர். கிளியுருவம் கொண்ட கிருதாசி என்பவள்பாற் பிறந்தமையால், இவ ருக்குச் சுகர் எனப்பெயர் அமைந்தது, சுகம்— கிளி. வியாசர், பிருகஸ்பதி, சனகர், நாரதர் ஆகியவர்பாற் கல்வி பயின்றவர். பிரம்ம நிஷ்டர். பக்தி யோகமும் இராச யோகமும் பரப்பியவர். காமவெகுளி மயக்கங்களை முற்றும் கடந்தவர்.

"ஓதரிய சுகர்போல ஏன்ஏன் என்ன
ஒருவரிலே யோஎனவும் உரைப்பேன்...'
எனத் தாயுமானவ அடிகளார், தமது பாடலில் இவரைக் குறிப்பிட்டுச் சிறப்பித்துள்ளார்.

### (6) கௌடபாதர் :

அத்துவைத தத்துவக் கொள்கையில், மானவ சம்பிர தாயத்தின் முதல்வர். இவர் கௌடம் என்னும் வங்காள நாட்டைச் சேர்ந்தவர். வங்காள நாட்டு மக்களுள் தலை சிறந்து விளங்கியவராதலின், கௌடபாதர் எனப்பெயர் பெற்ருர். இவர் சங்கரரின் குருவுக்குக் குரு (பரம குரு) ஆவர். மாண்டுக்கிய உபநிடதத்தின் விளக்கமாக, இவர் 'கௌடபாத காரிகை' என்னும் நூலை இயற்றினுர். உத்தரகீதை, சாங்கிய காரிகை, துர்க்கா சப்தசதீ, சுபாகோதயம், ஸ்ரீவித்யாரத்தின சூத்திரம் என்பன இவர் இயற்றிய நூல்கள் ஆகும்.

### (7) கோவிந்த பகவத் பாதர் :

சங்கரரின் குரு. இவர் காசுமீர தேசத்தவர். பூர்வாசிரமத்தில் சந்திரசருமர் என்னும் பெயரினர். பதஞ்சலியின் வியாகரணம் அறியச் சிதம்பரம் வரும்பொழுது, நருமதை நதிக் கரையில் கௌடபாதரைச் சந்தித்து, உபதேசம் பெற்ருர். இவரைப் பதஞ்சலி முனிவரின் அவதாரமாகப் பெரியோர் புகழ்வர்.

### (8) சங்கரர் :

மலையாள நாட்டில், ஆல்வாய்ப்புழை என்னும் நதிக்கரையில், காலடி என்ற இடத்தில், ஆத்திரேய கோத்திரத்தில் சிவகுரு என்னும் தந்தைக்கும், ஆர்யாம்பிகை என்னும் தாயார்க்கும், திருச்சூர் விருஷபாசலேசுவரர் அருளால் தோன்றினுர். நருமதை நதிக்கரையில் தவம் புரிந்து கொண்டு இருந்தவரும், கௌடபாதர் என்பவரின் மாணவரும் ஆகிய, கோவிந்த யோகீந்திரர் என்னும் குருவையடைந்து, அவர்பால் அருளுபதேசம் பெற்ருர். பாரத நாடு முழுவதும் யாத்திரை செய்து, பல செயற் கருஞ் செயல்கள் புரிந்தார். காசியில் வியாச தரிசனம் பெற்ருர். பதரிகாசிராமத்தில் ஒரு விஷ்ணு கோயில் எடுப்பித்தார். ஸ்ரீநகரில் 'விஷ்ணு சகஸ்ரநாம பாஷ்யம்' செய்தார். பிரயாகைத் திரிவேணி சங்கமத்தில் நீராடினுர். குமாரில பட்டர் என்பவரைச் சந்தித்தார். அவர் கூறியபடி மாகிஷ்மதி நகரத்தில், மண்டன மிச்ரர்என்பவரைக் கண்டார். சரசவாணி என்னும் அவர்தம் மனைவியார் நடுவராக விளங்க, மண்டன மிச்ரருடன் வாதம் புரிந்து வென்ருர். வாதில் தோற்ற மண்டனமிச்ரர், சுரேசுவராசார்யர் என்னும் பெயர் பூண்டு இவருக்கு மாணவராயினுர். பிரயாகையில் ஒருவருக்குத் தொழு நோய் தீர்த்து, உதங்கர் என்ற மாணவராக ஏற்ருர். கௌசாம்பியில் இறந்த சிறுவன் ஒருவனை உயிருடன் எழுப்பினுர். அமரசிம்மன் என்னும் சமண மன்னன் இயற்றிய அமரகோசம் என்னும் வடமொழி நிகண்டு நூலை, அழியாமற் காத்துப் பரவச் செய்தார். ஸ்ரீசைலத்தில் உக்கிரபைரவன் என்னும் காபாலிகனை வென்றி கொண்டார்.

யாகம் முதலிய கருமங்களைப் புரிவதே முக்கியம் என்னும் மீமாஞ்சகரின் கொள்கையைக் கண்டித்தார். ஞானமே வீடு பேற்றுக்குரிய சாதனம் என்று நிறுவினுர். பௌத்தம் சமணம் சாக்தம் காபாலிகம் போன்ற சமயங்களின் தவருன கொள்கைகளைக் கடிந்தார். இந்து மதத்தின் சீர்கேடுகளைப் போக்கி, ஆலய வழிபாட்டு முறைகளைத் திருத்தியமைத்தார். சிருங்கேரி, பூரி, துவாரகை, பத்ரிநாத், காஞ்சி என்னும் இடங்களில் ஆசாரிய பீடங்களை ஏற்படுத்திஞர். சுரேசுவரர், பத்மபாதர், அஸ்த்தாமலகர், தோடகர் முதலியவர்கள், இவர் தம் மாணவர்கள் ஆவர்.

பிரம்ம சூத்திரம், பகவத் கீதை, உபநிஷதங்கள் ஆகியவற்றுக்கு உரைகள் இயற்றினுர். மனீஷா பஞ்சகம், கனகதாராஸ்தவம், உபதேச சகஸ்ரி, தசசுலோகி, விவேக சூடாமணி, பிரமோத கீதாசாரம், ஆத்மபோதம், பஜகோவிந்தம், சுப்பிரமணிய புஜங்கம், சௌந்தரிய லகரி, சிவானந்த லகரி, விஷ்ணு சகஸ்ரநாம பாஷ்யம் முதலிய பல நூல்கள் இவரால் இயற்றப் பெற்றுள்ளன.

பிரம்மம் என்பது இரண்டற்ற பரம்பொருள். அதற்கு வேருகத் தோன்றும் உலகம், மாயையின் காரியம். பலவாகக் காணும் உயிர்த்தொகுதிகள், உண்மையிற் பிரமத்தின் வேருனவை

யல்ல. பிரம்மமும் ஆன்மாவும் ஒன்றே. இந்த ஞானத்தை அடைந்தால், பிறப்பு இறப்புக்களில் இருந்து விடுபடலாம் என்பது சங்கரர் கொள்கை. இது அத்வைதம், கேவலாத்வைதம், வேதாந்தம் என்னும் பெயர்களால் வழங்கப்படும்.

(9) பத்மபாதர் :

இவர் சனந்தனர் எனவும் வழங்கப்படுவர். சங்கரரின் மாணவர்களுள் முதல்வர். பிரம்ம சூத்திரத்தின் முதல் நான்கு சூத்திரங்களுக்குப் பஞ்சபாதிகா என்னும் விளக்கவுரை எழுதினர். அத்துவைத தத்துவத்தில் விவரணம் என்னும் கொள்கை வகையினை முதன் முதலில் தோற்று வித்தவர் இவரே. இவரது 'பஞ்சபாதிகா' என்னும் நூலுக்குப் பிரகாசாத்மர், அகண்டானந்தர், ஆனந்த பூர்ணர், வித்தியாரண்ணியர், இராமானந்த சரசுவதி முதலிய பலர் உரை எழுதியுள்ளனர். இவர் வாயுவின் கூறு என்பர்.

(10) அஸ்தாமலகர் :

இவருக்கு ஆனந்தகிரி எனவும் பெயர் வழங்கும். இவரைத் திருமாலின் கூறு என்பர். சங்கரர் கோகர்ணம் என்னும் தலத்திற்கு அருகில் உள்ள ஸ்ரீபலி என்னும் ஊருக்குச் சென்றுர். அங்கே வாழ்ந்து கொண்டிருந்த பிரபாகரர் என்னும் அந்தணச் செல்வருக்கு நோய்வாய்ப்பட்ட ஒரு மகன் இருந்தான். தந்தையார் சங்கரரின் காலில் விழுந்து பணிந்தார். அதுகண்டு மகனும் அங்ஙனமே விழுந்து பணிந்தான். ஆனுல் நெடுநேரம் ஆகியும் எழுந்திருக்கவில்லை. அப்போது சங்கரர் அவனை நோக்கி நீ யார்? என வினவினர். பேசாமலும், உண்ணுமலும், விளையாடாமலும், படியாமலும், நோய்வாய்ப்பட்டிருந்த அச்சிறுவன், உடனே பன்னிரண்டு சுலோகங்கள் அடங்கிய "அஸ்தா மலக ஸ்தோத்திரம்" என்னும் நூலைப் பாடினுன். அத்துவைதக் கொள்கைகளை, அந்நூல் மிகவும் நன்கினிது விளக்குகின்றது. சங்கரரே அதற்கு உரை எழுதினர் என்பர்.

(11) தோடகாசாரியர் :

இவரது இயற்பெயர் கிரி என்பது. சங்கரரின் மாணவர்களுள் ஒருவராகிய இவர், சாத்திரப் பயிற்சியிற் சிறிதும் கருத்தூன்ருமல், தம் குருநாதருக்குப் பணிவிடைகள் புரிவதிலேயே மிகவும் கருத்தூன்றியிருந்தார். அதனுல் இவரைச் சாத்திர ஞானம் இல்லாதவர் என மற்றைய மாணவர்கள் கருதிக் கொண்டு, இகழ்ந்து புறக்கணித்து வந்தனர். அந்நிலையில், இவர் சங்கரரின் திருக்குறிப்பின்படி எட்டுச் சுலோகங்கள் கொண்ட "தோடாகாஷ்டகம்" என்னும் துதி நூலைப் பாடினுர். 'பவசங்கர தேசிகமே சரணம்' என்னும் அதன் சொற்பொருட் சுவைநலங்களைக் கண்டு, அனைவரும் வியந்து மகிழ்ந்தனர். 'சுருதிசார சமுத்தாரணம்' என்னும் பிறிதொரு நூலையும் இவர் அருளிச் செய்துள்ளார். அது 179 சுலோகங்கள் கொண்டது. "வேதாந்த வேத்ய பரதத்துவ நிவேதனம்" எனவும் அதற்கு ஒரு பெயர் வழங்கும். தோடகம் என்னும் செய்யுள்வகையைக்கொண்டு, தம் துதிமாலையை அருளிச் செய்தமையால், இவருக்குத் "தோடகாசாரியர்" எனப் பெயர் வழங்குவதாயிற்று.

(12) சுரேசுவரர் :

சங்கரரின் சீடர்கள் நால்வருள் ஒருவர். பிருகதாரண்யக தைத்திரிய உபநிஷத பாஷ்ய வார்த்திகம், மானசோல்லாசம், தட்சிணுமூர்த்தி ஸ்தோத்திரம், பஞ்சீகரண வார்த்திகம், நைஷ்கார்மியசித்தி என்னும் நூல்கள் இவராற் செய்யப் பட்டுள்ளன.

(13) விமுக்தாத்மன் :

இஷ்டசித்தி என்னும் சிறந்த அத்துவைத தத்துவ சாத்திரத்தை இயற்றியவர். இதன்கண் யோகாசாரபௌத்தர், பிரபாகரமீமாம்சகர், பட்டர், நையாயிகர், மாத்தியமிகர் ஆகிய பலரையும் அழகுற மறுத்து அத்துவைதக் கொள்கையை நிறுவியுள்ளார்.

(14) சர்வக்ஞாத்மன் :

சங்க்ஷேப சாரீரகம்; பஞ்சப்பிரக்கிரியை, பிரமாணலட்சணம் என்னும் நூல்களை இயற்றியவர். சங்க்ஷேப சாரீரகம் 1,240 சுலோகங்கள் கொண்டது. அப்பைய தீட்சிதர், மதுசூதன சரசுவதி, பிரமானந்த சரசுவதி முதலிய சான்ருேர்கள், இந்நூல்களைப் பெரிதும் போற்றி இவற்றினின்று மேற்கோள்கள் காட்டியுள்ளனர்.

## (15) மண்டன மிச்ரர் :

இவர் சங்கரருடன் விவாதம் செய்து தோற்று, அத்துவைதக் கொள்கையைத் தழுவியவர். பிரம்ம சித்தி, மீமாம்ச அநுக்கிரமணிகை, பாவனுவிவேகம், விதிவிவேகம், ஸ்போட சித்தி விப்பிரமவிவேகம், முதலிய நூல்களை இயற்றினர். கௌடபாதரின் மாண்டுக்ய காரிகை, பர்த்ருஹரியின் வாக்கியபதீயம் ஆகியவற்றிலிருந்து, தமது பிரமசித்தியில் மேற்கோள் காட்டுகின்ருர். குமாரிலபட்டர் அருளிய சுலோகவார்த்திகம் என்பதில் இருந்தும் இவர் மேற்கோள்கள் எடுத்தாண்டுள்ளார். பிரபாகர பட்டர் இவருக்குச் சமகாலத்தில் இருந்த இளைஞர். இவர் இயற்றிய பிரம்ம சித்தி, பிரம்மகாண்டம், தர்க்ககாண்டம், நியோககாண்டம், சித்திகாண்டம் என்னும் நான்கு பிரிவுகளை உடையது.

## (16) வாசஸ்பதி மிச்ரர் :

அத்துவைதக் கொள்கைகளை விளக்கிய அறிஞர் பெருமக்களில் மிகவும் குறிப்பிடத்தக்க சிறப்புடைய ஒருவர். பாமதி, நியாயகணிகை, பிரம்ம தத்துவ சமிட்சை, தத்துவபிந்து, நியாய வார்த்திக தாற்பரிய டீகை, நியாய சூசினி பந்தா, சாங்கிய தத்துவ கௌமுதி, தத்துவ வைசாரதி எனப்பல நூல்கள் இயற்றியவர். இவரது பாமதிக்கு அமலானந்தர் கல்பதரு என்றும், அப்பைய தீட்சிதர் பரிமளம் என்றும், இலட்சுமி நரசிம்மர் ஆபோகம் என்றும் உரைகள் வகுத்துள்ளனர். மற்றும் பாமதி திலகம், பாமதி விலாசம் எனவும் நூல்கள் இயற்றப்பட்டுள்ளமை, வாசஸ்பதி மிச்ரரின் அளவற்ற பெருமாட்சிமைக்குச் சான்று பகரும்.

## (17) ஞானகணபாதர் :

தத்துவ சித்தி என்னும் நூலை இவர் இயற்றியருளினர். அப்பைய தீட்சிதர் தமது சித்தாந்த லேச சங்கிரகம் என்னும் நூலில் இதனைப் பல இடங்களில் போற்றி எடுத்து மேற்கோள் காட்டியுள்ளார்.

## (18) பிரகாசாத்மன் :

இவர், சங்கரரின் மாணவருள் ஒருவராகிய பத்மபாதர் என்பவர் இயற்றிய பஞ்சபாதிகா என்னும் நூலுக்குப் பஞ்சபாதிகா விவரணம் என்னும் வியாக்கியானம் எழுதியிருக்கின்ருர்.

## (19) ஸ்ரீஹர்ஷர் :

இவர் 12-ஆம் நூற்ருண்டில் விளங்கியவர். நையாயிகர்கள் கூறும் வரையறைகள் (Definitions) அனைத்தையும் மறுத்து, சங்கரரின் ஜகத் மித்தியத்துவம் பற்றிய கொள்கையை நிறுவுவதற்பொருட்டு, 'கண்டன கண்ட கத்தியம்' என்னும் சிறந்த நூலை இயற்றியுள்ளார். இவரது கொள்கைகள் கருத்துக்கள் பலவற்றை மதுசூதன சரசுவதி, தமது அத்துவைத சித்தி என்னும் நூலில் மிகப் பெரிதும் தழுவிக் கொண்டு போற்றியுள்ளார்.

## (20) ஆனந்தாநுபவர் :

இவர் இஷ்டசித்திவிவரணம், நியாயரத்ன தீபாவலி, பதார்த்த தத்துவ நிர்ணயம் என்னும் நூல்களை இயற்றியுள்ளார். தமது நியாயரத்ன தீபாவலியில், தம்மை நாராயணசோதி என்பவரின் மாணவராகக் குறிப்பிட்டுக் கொள்ளுகின்ருர். இதன்கண் குமாரிலர், பிரபாகரர் விசுவரூபர் மண்டனர் வாசஸ்பதி சுசரிதமிச்ரர் அனந்தபோதர் முதலியவர்களைக் குறிப்பிடுகின்ருர். பதார்த்த தத்துவ நிர்ணயம் என்னும் நூலில், வைசேடிகர், பௌத்தர், சாங்கியர், மீமாம்சகர் ஆகியோரின் கொள்கைகள் இவரால் பெரிதும் மறுக்கப்பட்டுள்ளன. பாசர்வக்ஞர் இயற்றிய நியாயசாரம் என்னும் நூலுக்கு இவர் செய்துள்ள உரை சிறப்புடையது.

## (21) ஆனந்தபோதர் :

ஆத்மவாசர் என்பவரைத் தீட்சா குருவாகவும், விமுக்தாத்மர் என்பவரை வித்தியா குருவாகவும் கொண்டவர். பிரகாசாத்மரின் சப்த நிர்ணயம் என்பதற்குத் தீபிகை இயற்றியுள்ளார். நியாய மகரந்தம் பிரமாணமாலா, நியாயதீபாவலி என்னும் நூல்களும் இவரால் செய்யப்பட்டுள்ளன. நியாய மகரந்தம் என்னும் தமது நூலில் சாங்கியர், பௌத்தர், வைசேடிகர், நையாயிகர், பூர்வமீமாஞ்சகர், ஞானசமுச்சய வாதிகள் ஆகிய பலரையும் அழகுற மறுத்திருக்கின்ருர்.

## (22) சிற்சுகர் :

இவர், நியாயசுதா, ஞானசித்தி என்பன எழுதிய கௌடேசுவரரின் மாணவர். மண்டன மிச்ரரின் பிரம்மசித்திக்கு அபிப்பிராயப் பிரகாசிகை என்னும் வியாக்கியானம் எழுதினர். மற்றும் ஆனந்த போதரின் நியாய மகரந்தம், ஸ்ரீஹர்ஷரின் கண்டகண்ட கத்தியம் ஆகியவற்றிற்கு உரைகளும் இவரால் செய்யப் பெற்றுள்ளன. தத்துவப் பிரதீபிகை என்னும் தமது நூலில் உதயனர், உத்யோதகாரர், குமாரிலர், பத்மபாதர், வல்லபர், சாலிகாநாதர், சுரேசுவரர், சிவாதித்தியர், குலார்க்கபண்டிதர், ஸ்ரீதரர் என்னும் பலரையும் குறிப்பிட்டுள்ளார். விவரண தாற்பர்யதீபிகை, பாஷ்யபாவப்பிரகாசிகை என்னும் நூல்களும் இவரால் செய்யப் பெற்றுள்ளன.

— ஆசிரியர் (தொடரும்)

19

# திருவள்ளுவர் உடன்படாத கொள்கைகள் சில

## முன்னுரை :

திருவள்ளுவர் எல்லாச் சமயங்களும் மக்களும் உடன்படத்தக்க வகையில், தமது திருக்குறளை இயற்றியுள்ளார் எனப் பலரும் பொதுவாகக் குறிப்பிடுவது உண்டு. கிறித்தவர்,[1] இசுலாமியர், சமணர், பௌத்தர், சைவர், வைணவர், உலகாயதர் ஆகிய சமயத்தவர் பலரும், தத்தம் சமயக் கொள்கைகளுள் அனைத்தையுமோ அல்லது சிலபலவற்றையோ, திருவள்ளுவர் உடன்பட்டுத் தழுவி ஏற்றுக் கொண்டுள்ளனர் என்று கூறிக்கொண்டு, பெருமிதம் எய்துவது இயல்பாகக் காணப்படுகின்றது.[2] இங்ஙனம் திருவள்ளுவர் உடன்படும் கொள்கைகளை மட்டுமே பெரும்பாலும் கூறி மகிழ்கின்ற நாம், அவர் உடன்படாத கொள்கைகள் சிலவற்றைப்பற்றியும், ஒரு சிறிதாதல் கருதியுணர்தல் நலம் பயக்கும்.

## காலநிலை :

திருவள்ளுவர் இற்றைக்கு ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டவர் என்பது, இன்று பலரும் ஒப்புக் கொண்டுள்ள செய்தி. ஆதலின் அவர்தம் காலத்தில் கிறித்தவம், இசுலாமியம், சீக்கியம் என்னும் மதங்கள் இருந்தில என்பது தெளிவு. யூதம், பார்சியம், கன்பூசியம் என்பன திருவள்ளுவரின் காலத்திற்குச் சிறிது முற்பட்டனவேயாயினும், அவைகள் அப்போது தமிழ் நாட்டிற்கு வந்தில. இன்று நம்மிடையே பெரிதும் பரவியுள்ள சைவம், வைணவம் முதலிய சமயங்களும், மிகவும் பழமை வாய்ந்தனவேயாயினும், இப்போதுள்ள நிலையில், திருவள்ளுவர் காலத்திற் சிறிதும் இருந்தில. திருவள்ளுவர்க்குப் பின்னரே நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்றி, இந்நாளில் நிலவும் நிலையில், சைவ வைணவ சமயங்களைப் பல்லாற்றானும் பரப்பி வளர்த்தருளினர். திருவள்ளுவர் காலத்தில் உலகாயதம், வைதிகம், சமணம், பௌத்தம் என்னும் சமயங்கள் மட்டுமே தமிழகத்திற் பரவியிருந்தன எனத் தெரிகின்றது.

## கவிஞன் :

"காலத்தைப் படைப்பவனும் காலத்தாற் படைக்கப்படுபவனும் கவிஞன்" என்னும் உண்மைக்கு ஏற்ப, இந்நாற்பெருஞ் சமயங்களும் தம்முள் ஒன்றுடன் ஒன்று இகலி நின்று மக்களிடையிற் பலவகைச் சிக்கல்களை விளைவித்து வந்த நிலையிலேயே, திருவள்ளுவர் ஆகிய ஞானஞாயிறு தோன்றித், திருக்குறட் செழுங்கதிர்களைப் பரப்பி அறிவொளி வீசி, வாழ்வொழுக்க இன்பம் மலரச் செய்தருளினர் எனலாம். தமது காலத்தில் மக்களிடையிற் பரவியிருந்த பல பிழைபட்ட கொள்கைகளையும் ஒழுக்கங்களையும் உடன்படாமல், மறுத்துக் கடிந்து திருத்தியருளியவர் திருவள்ளுவர். இவ்வடிப்படையில், அவர் உடன்படாத கொள்கைகளுள் சிலவற்றை மட்டும், ஈண்டுச் சுருக்கமாகக் காண்போம்.

## அறன்வலியுறுத்தல் :

(1) திருவள்ளுவர் காலத்திலும், அதற்கு முற்பட்டும் இருந்த மக்களுட் பெரும்பாலோர், 'இன்பமே வாழ்க்கையின் முதன்மையான குறிக்கோள்; அதனை எம்முறையாலேனும் அடையலாம்' என்னும் கொள்கையுடையவராக இருந்தனர் போலும்! பண்டைக்கால மக்களுள் ஒருசாரார் அறத்தினும் இன்பமே பெரிதும் முதன்மையுடையதெனக் கருதியிருந்திருத்தல் கூடும் என்பது, "இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு

---

([1]) "Humility, Charity and Forgiveness of injuries, being Christian qualities are not described by Aristotle...Now these three are forcibly inculcated by the Tamil moralist! These are the themes of his finest verses. So far, then we may call this Tamil poet a Christian" —Rev. Dr. G. U. Pope.

([2]) "The fact that the Tamil classic Thirukural is claimed by different religious sects indicates its catholicity..Thirukural is used by the Buddhists and the Jains, the saivites and the Vaishnavites. It is called *Podumarai* or Common scripture."

Dr. S. Radhakrishnan,
Religion and Culture, P. 27

அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்'' என வரும் தொல்காப்பிய நூற்பாவாலும் புலனாகின்றது. அதனை உடன்படாமல், அந்நிலையை மாற்றி அறமே இன்பத்திலும் முதன்மையுடையது என்றும்; அறத்தான் வருவதே இன்பம் என்றும் வலியுறுத்திய பெருமை திருவள்ளுவர்க்கே உரியது. தனிமனித வாழ்வின் நலத்திற்கு இன்பம் முதன்மை; சமுதாய வாழ்வின் நலத்திற்கு அறம் முதன்மை என்று கண்டு, அறத்திற்கு முதலிடம் அளித்தவர் திருவள்ளுவரே யாவர். "சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும் அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல" எனப் புறநானூறு பாடியது, திருவள்ளுவர் நிகழ்த்திய புரட்சியின் விளைவேயாகும். "வடுவிலா வையத்து மன்னிய மூன்றில் நடுவணது எய்த இருதலையும் எய்தும்" எனப் பொருளுக்குப் பிறர் அளித்த சிறப்பை உடன்படாமல், "அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம் புல்லார் புரள விடல்'' எனப் பணித்தருளியவர் திருவள்ளுவரே ஆவர்.

## கடவுளுணர்ச்சி:

(2) அறவாழ்வு அல்லது ஒழுக்கமே அமையும், கடவுளுணர்ச்சியும் வழிபாடும் வேண்டுவதில்லை என்னும் ஒரு கொள்கை, பண்டை நாளில் பொதுவாக யாண்டும் நிலவி வந்தது. சாங்கியம், மீமாஞ்சகம் முதலிய வைதிகக் கொள்கைகளும், சமணம் பௌத்தம்[3] சார்வாகம் முதலிய சமயங்களும் கடவுட்கொள்கை யில்லாதனவாகவே எங்கும் பரவி வந்தன. அவற்றை உடன்படாமல், அறவாழ்வு அல்லது ஒழுக்கம் நிலைபெறுவதற்குக்கூட, இறையுணர்வும் வழிபாடும் மிக மிக இன்றியமையாதன என்று வற்புறுத்தியவர் திருவள்ளுவரே எனலாம். 'அறவாழி அந்தணன்' என்றும், 'பொறிவாயில் ஐந்தவித்தான் ஒழுக்கநெறி' என்றும் திருவள்ளுவர் குறிப்பிட்டிருத்தல், ஈண்டுக் கருதியுணரற்பாலது. 'கடவுள் வாழ்த்து' என்னும் பகுதியால் மட்டுமேயன்றி, 'உலகு இயற்றியான்', 'வகுத்தான் வகுத்த வகை', 'உலகத்தார் உண்டு என்பது' 'முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை' எனவரும் தொடர்களாலும் திருவள்ளுவர் கடவுளுண்மையினை வலியுறுத்தியுள்ளார். திருவள்ளுவர் திருக்குறள் இயற்றிக் கடவுளுண்மையினையும் வழிபாட்டினையும் வற்புறுத்திய பிறகே, தமிழ் நூல்களின் தொடக்கத்தில் கடவுள் வணக்கம் செய்யும் வழக்கம் ஏற்படுவதாயிற்று. திருவள்ளுவரின் அடிச்சுவட்டைப்பின்பற்றியே, பாரதம் பாடிய பெருந்தேவனார் என்பவர், சங்கத்தொகை நூல்களின் தொடக்கத்தில், கடவுள் வணக்கப் பாடல்களைப் பிற்காலத்தில் இயற்றிச் சேர்த்து உதவினார் என்பது ஈண்டுக் கருதுதற்கு உரியது. திருவள்ளுவர் நாத்திகர் அல்லர்; திருவள்ளுவர்க்கு நாத்திகம் என்பது சிறிதும் உடன்பாடு அன்று.*

## ஒருவனே தேவன்:

(3) கடவுளுண்மையில் நம்பிக்கை கொண்டிருந்த பண்டைக்கால மக்களுட் பெரும்பாலோர், 'ஒரு தேர் செய்வதற்குப் பலர்கூடி முயல வேண்டியிருத்தலின், இவ்வுலகத்திற்கும் கடவுளர் பலர் உளராதல் வேண்டும்' என்னும் கருத்தினராய்க் கடவுளர் பலர் என்னும் கொள்கை (Polytheism) உடையவராக இருந்தனர்.* அதனாலேயே இந்திரன், சோமன், வருணன், மித்

*"Language proceeds from original polysyllabism towards monosyllabism, just as the history of religion does not pass from the belief in one god to the belief in many gods, but universally from *Polytheism* towards *Monotheism.*

— Otto Jespersen.

(3) "Jainism and Buddhism are fundamentally atheistic. From the earliest times to the present day, Jains and Buddhists have strenuously rejeceted the doctrine that the Universe is created or guided by a divine will or a divine mind; for them natural law is a sufficient explanation. These literature contain many criticisms of the theistic position"

—Sources of Indian Tradition, p. 78.

"The religious systems in those days were, by and large, atheistic, and the Indian mind tended to indulge in moral discussion and in moral exaltion unconnected with theistic faith as Buddhism and other systems clearly show"

—2500 years of Buddhism, 299.

*"Thiruvalluvar bases his ethics on the grand truths of Tripadartha, Pathi-Pasu-Pasam. In fact, his creed is *not a godless creed* like that of the Jains or Buddhists. In this respect, there disparity between the Naladi and this work"

— Dr. G. U. Pope,
Ethics of Kural.

"Buddhism in its purity ignored the existence of God; it denied the existence of soul; it was not so much a religion as a code of ethics."

— Winifred Stephens,
Legends of Indian Buddhism, p. 7.

திரன் முதலிய கடவுளர் பலரை, வேதகால மக்கள் துதித்துப் போற்றி வந்தனர். 'ஒரு தேரைப் பலர்கூடி முயன்று செய்யினும், அப் பலரும் ஒரு தலைமைத் தச்சனின் ஏவல்வழி நின்றே அதனைச் செய்து முடிக்கக் காண்டலின், கடவுளர் பலர் உளர் எனக் கொள்ளினும், அவர் களுக்கெல்லாம் உரிய தனிமுதற் பெருந்தலை மைக் கடவுள் ஒருவரே உளராவர்' என்னும் உண்மையைப் பண்டைக்கால மக்கள் ஓர்ந்து உணர்ந்திலர். இந்நிலையில் கடவுள் பலர் என்னும் கொள்கையை உடன் படாமல், கடவுள் ஒருவரே என்னும் உண்மையை (Monotheism) தமிழகத் தில் நிலைபெறுத்தியவர் திருவள்ளுவரே யாவர்.

## ஆதிபகவன் :

(4) 'கடவுளே உலகமாகப் பரிணமித்துக் காணப்படுகின்றார்' என்பன போன்ற கொள்கை கள் (Pantheism), திருவள்ளுவர்க்கு உடன்பாடு அன்று. 'ஆதி பகவன் முதற்றே உலகு' என்ப தனால், கடவுளே உலகம் அன்று, உலகம் வேறு கடவுள் வேறு, உலகத்திற்குக் கடவுள் நிமித்த காரணன் என்னும் உண்மைகளைத் திருவள்ளுவர் உணர்த்துகின்றார்.

'உலகம் என்றும் உள்ளது ; அஃது எவரா லும் தோற்றுவிக்கப்பட்டதன்று ; அது தோன்று வதும் அழிவதும் இல்லை' என்பது சமணர் கொள்கை. ''மூவா முதலா உலகம் ஒரு மூன்றும் ஏத்த'' எனவரும் சீவகசிந்தாமணிச் செய்யுள் இதனைத் தெள்ளிதின் உணர்த்தும். இவ்வாறே உலகாயதரும், மீமாஞ்சகரும் கூறு வர். இது திருவள்ளுவர்க்கு உடன்பாடன்று. உலகம் கடவுளால் படைத்து இயற்றப்பட்டது. எனவே அதற்குத் தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழில்கள் உண்டு. ''உலகம் கடவுளையே முதலாக உடையது'' என்பது திருவள்ளுவர் கொள்கை. 'உலகியற்றியான்' 'ஆதி பகவன் முதற்றே உலகு' என்னும் திருக்குறட் டொடர் களால் இவ்வுண்மை விளங்கும்.

இங்ஙனமே, ''பெரிய உடம்பிற் பெரிய உயி ரும், சிறிய உடம்பிற் சிறிய உயிரும் இருக்கும். உயிரின் அளவிற்கு ஏற்பவே அதன் உடம்பும் பெரியதாகவோ சிறியதாகவோ அமையும்'' என் பது சமணக் கொள்கை. அதனாலேயே சமணச் சிற்பங்கள் பெரும் பாலும் மிகப் பெரியனவாக அமைக்கப்படும். சமணரின் வெள்ளைக் குளம் (Sravana Belagola) என்னும் இடத்திலுள்ள கோமதேசுவரர் என்னும் திருவுருவம் மிகப்பெரிய தாக அமைந்திருத்தலும் காணலாம். மற்றும் இச்சமணக் கொள்கையினையே, பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்றான 'பழமொழி நானூறு' என்னும் நூலின் துதிச் செய்யுளில் வரும் 'பெரியதன் ஆவி பெரிது' என்னும் தொடர் இனிது குறிப்பிடுகின்றது. இது திரு வள்ளுவர்க்கு உடன்பாடன்மை,

> ''உருவுகண் டெள்ளாமை வேண்டும் ;
> உருள்பெருந்தேர்க்கு
> அச்சாணி அன்னார் உடைத்து''

எனவரும் திருக்குறளால் இனிதுதெளியப்பெறும்.

## பல்லுயிர் :

(5) பௌத்தர் உலகாயதர் போன்றவர்கள் உயிர் என்பதொரு பொருள் இல்லை என்பர். (2) ''எப்பொருளுக்கும் ஆன்மா இல்லை'' என்பது மணிமேகலை. இது திருவள்ளுவர்க்கு உடன் பாடு அன்று. 'தன்னுயிர்க்கு இன்னாமை தான் அறிவான்' 'மன்னுயிர் ஓம்பி அருளாள்வார்' 'உடம்போடு உயிரிடை நட்பு' என்றாற்போலப் பல இடங்களிலும் திருவள்ளுவர் உயிரைக் குறித்துள்ளார். ஒரு சிலர், 'சந்திரன் ஒன்றே நீர்க்குடங்கள் பலவற்றிலும் நிழலாடித் தோன்று தல் போல, ஓருயிர்தான் பலவுடம்புகளிலும் இருந்து இயங்கி வருகின்றது' என்பர். 'பகுத் துண்டு பல்லுயிர் ஓம்புதல்' எனக் குறிப்பிடு தலின், திருவள்ளுவர்க்கு ஓருயிர்க் கொள்கை

---

(4) "Buddha never believed in the existence of soul. He criticises the soul theories of other sects in Dikka Nikayam, 2·64"

In the Questions of King Menander, Milindhapanha, Nagasenar of 2nd century B. C., explains that there is no entity separately as soul by a simile of the Chariot".

— Sources of Indian Tradition




திருவேற்காடு ஸ்ரீ தேவி கருமாரி அம்மன்

Curtesy: Sri Devi Karumari Amman Devasthanam, Thiruverkadu

With Compliments

(Monism) உடன்பாடு அன்று என்பது தெளிய லாம். இவ்வாறே பாவமில்லை புண்ணியமில்லை என்றாற் போன்ற கொள்கைகளும் திருவள்ளு வர்க்கு உடன்பாடின்மை, திருக்குறளால் தெளி யப்படும்.

## பெண்ணிற் பெருந்தக்கதில் :

(6) பண்டைக்கால மக்களிடையே பல வகைப் பொருந்தாக் கருத்துக்கள் நிலவி வந்தன. அவற்றுள், 'பெண்கள் பாவப் பிறவி கள்; ஆண்களை விடத் தாழ்ந்தவர்கள்; அவர் களுக்கு விடுபேறு இல்லை' என்பன போல் வனவும் சில. சமணரும் பௌத்தரும் பெண்களை இழிவாகவே கருதி நடத்தி வந்ததாகத் தெரி கின்றது. புத்தர்பிரான் பௌத்தமடங்களிற் பெண்களைச் சேர்த்துக் கொள்ள எளிதில் இசைவு அளித்திலர். இசைந்த பின்னரும், பிட்சுணி களுக்குப் பலப்பல கட்டுப்பாடுகள் விதிக்கப் பெற்றன. சமணநூல்களில் பெண்களைக் கடிந் துரைக்கும் பகுதிகள் நிரம்பக் காணப்படும். குறிப்பாகத் திகம்பர சமணத்தில் பெண் துறவி கள் இலர். பெண்களைப் பல்லாற்றானும் இழித்துப் பழித்து இகழ்வாக நடத்துவது, அக்காலத்துச் சமுதாய நிலையாக இருந்து வந்தது. திருவள்ளு வர்க்கு இன்னோரன்னவை உடன்பாடல்ல. "பெண்ணிற் பெருந்தக்க யாவுள" (6) என அறைகூவி வினவி, அதற்குப் 'பெண்ணிற் பெருந்தக்கது இல்' (*1137*) எனத் தாமே விடை கூறிப் பெண்ணின் பெருமையினை உலகறிய நிலை நிறுவியவர் திருவள்ளுவர்.

## வேள்விகள் :

(7) திருவள்ளுவர் காலத்திலும் அதற்கு முன்னரும் தமிழகத்தில் வைதிகமதம் பரவி யிருந்தது. அதனால் தமிழகத்தில் யாகங்கள் பலப்பல ஆங்காங்கே நடைபெற்றன. பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி முதலிய பல பழைய தமிழரசர்களின் பெயர்களே இவ்வுண்மைக்குச் சான்று பகரும். இருக்குவேதம் எசுர்வேதம் சதபதபிராமணம் முதலியவற்றில், வருணப் பிர காசம் வாஜபேயம் பௌண்டரிகம் இராசசூயம் அசுவமேதம் புருஷமேதம் சர்வமேதம் சவுத்திரா மணி முதலிய பல யாகங்கள் செய்வது பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. இத்தகைய யாகங்கள் திருவள்ளுவர்க்கு உடன்பாடு அல்ல. கொலைவேள்விகளை* அவர் பெரிதும் வெறுத்தார். "நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க் குக் கொன்றாகும் ஆக்கம் கடை"; "அவி, சொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை நன்று" என்பன போல வரும் குறட்பாக்கள் இவ்வுண்மைக்குச் சான்று பகரும். விருந்தோம்புதல் முதலியவற்றை வேள்விகள் எனத் திருவள்ளுவர் சிறந்தெடுத்துக் குறிப்பிடுதலும் இங்குச் சிந்தித்தற்குரியது.



## பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் :

(8) திருவள்ளுவர் காலத்திலும் அதற்கு முன்னரும் பிறப்பில் உயர்வு தாழ்வு கருதும் சாதி வேறுபாடுகள் முதலியன பெரிதும் நிலவி வந்தன. இன்றளவும் அவை இருந்தே வருகின்றன. சமண சமயம் அவற்றை ஒழிக்க முதலில் ஓரளவு முயன்றது. எனினும், பிற்காலத்தில் அவற்றை ஏற்றுகொண்டுவிட்டது. மனுமிருதி போன்ற வைதிகமத நூல்கள் சாதி வேற்றுமைகளைப் பாராட்டி, அவைகள் வளர்வதற்குரிய வழிகளும் வகுத்தன. திருவள்ளுவர்க்கு இவை உடன் பாடு அல்ல. "பிறப்பொக்கும் எல்லா உயிர்க் கும்" என்று புரட்சிப் பெருமுழக்கம் செய்து, "மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும் கீழல்லார் கீழல்லவர்" எனச் சிறந்த தீர்ப்பும் அளித்தவர் திருவள்ளுவர்.

---

"Women claimed to be admitted to a female branch of the order. Again and again the Buddha refused, and it was through the insistence of Ananda that they finally gained admission. Even then the female order of Bhikkunis was founded only under strict and humiliating rules, and the Buddha is reported to have said that their admission would materially shorten the life of the Buddhist religion..."

-- Christmas Humphreys, Buddhism, 38

*"The mere beginning of Aswamedha sacrifice involves the slaying of 609 animals in a certain prescribed succession..."

— Sacred Books of the East, 44-311

## ஒழுக்கம் விழுப்பம்தரும் :

(9) திருவள்ளுவர் காலத்திலும் அதற்கு முன்னரும் இருந்த மக்களின் சமுதாய வாழ்வில், பல இழிசெயல்களும் நிலைகளும் இருந்தன என்று தெரிகின்றது. கள்ளுண்ணலும் சூதாடலும் அக் காலத்திற் பெரிதும் பரவியிருந்தன. சோமப் பூண்டின் சாற்றினாற் சமைத்த கள்ளை மிகுதி யாகப் பருகி வெறித்திருந்த ஒருவன் பாடிய பாடலும், சூதாடலிற் கைதேர்ந்த ஒருவன் பாடிய பாடலும், இருக்கு வேதம் பத்தாம் மண்டலத்தில் (*139, 34*) காணப்படுகின்றன. (7) இராமா யணத்தில் பல மனைவியர் மணமும் (Polygamy), மகாபாரதத்தில் பல கணவர்மணமும்(Polyandry) குறிக்கப்பட்டுள்ளன. நிதான சூத்திரம் (*3, 8*), சதபதப்பிராமணம் (*2,5, 2.20*)முதலிய நூல்களின் வாயிலாக அக்காலத்து மக்கள் சிலர்பால் இருந்த ஒழுக்க முறைகேடு புலனாகின்றது. சமண பௌத்த சமயங்கள் வற்புறுத்திய துறவுநெறி வாழ்வின் காரணமாகச் சமுதாயத்திற் கூடா ஒழுக்கங்கள் மிகுதிப் படலாயின. இன்னோரன்ன நிலைகளைக் கண்டே, திருவள்ளுவர் "ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப் படும்" என்று வற்புறுத்தி, ஒழுக்கமுடைமை, கூடா ஒழுக்கம் என்னும் அதிகாரங்களையும் வகுத் தருளினர்.

## நியோகம் :

(*10*) பண்டைக்கால இந்திய மக்கட் சமு தாயத்தில், தன் கணவனால் மகப்பேறு வாய்க்கப் பெறாத ஒரு பெண், தன் கணவனது கட்டளைப் படி வேறு ஆடவரை மருவிப் புதல்வரைப் பெறு தலும், ஆடவர் கைம்மைப் பெண்டிரைக் கூடிப் புதல்வரைப் பெறுதலும் ஆகிய வழக்கங்கள் இருந் தன. இப்பழக்கம் யூதமக்களிடமும் இருந்து வந்தது. இது நியோகம் (Levirate) எனப் படும். இதனை மனுமிருதி ஒன்பதாம் இயலின் *59*, *60*, *61* ஆம் செய்யுட்கள் வகுத்துரைக் கின்றன. மகாபாரதத்தில் வியாசர் இம்முறைப் படியே திருதராட்டிரன், பாண்டு, விதுரர் ஆகி யோர் பிறக்கச் செய்தருளினர். குந்திதேவியும், மத்திராதேவியும் இம்முறையைக் கடைப் பிடித்தே பஞ்ச பாண்டவர்களைப் பயந்தெடுத் தனர். 'நியோகம்' என்னும் இந்த இழிமுறைச் செயல், திருவள்ளுவர்க்குச் சிறிதும் உடன் பாடன்று. இங்ஙனமே, 'ஒருவன் தன் வசதிக் கேற்ப ஒன்றுக்கு மேல் நான்கு மனைவியரை மணந்துகொள்ளலாம்' (*8*) என்பது போன் றிருந்த சில சமயசமுதாயப் பழக்கங்களும் கொள்கைகளும் திருவள்ளுவர்க்கு உடன் பாடல்ல. "ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத்திக்கு ஒருவன் (Monadry) என்பதே, திருவள்ளுவர் கொள்கை. மணம் செய்து கொண்ட இருவர் இடையிற் பிரிந்து மணமுறிவு (Divorce) கொள்ளுதற்கும் சில சமயங்கள் இசைவு தருகின்றன. அது திருவள்ளுவர்க்கு உடன் பாடு அன்று.

**"இம்மைப் பிறப்பிற் பிரியலம் என்றேனக் கண்ணிறை நீர்கொண் டனள்".**

## புலால் மறுத்தல் :

(*11*) பண்டைக்காலத்து இந்திய மக்கட் சமுதாயத்தில் புலாலுண்ணுதல் பெரு வழக்க மாக நிலவி வந்தது. வேள்விகளில் உயிர்களைக் கொலை செய்து, அவற்றின் 'வபை' என்னும் இறைச்சியைத் தின்பது குற்றமாகவோ பாவமாக வோ கருதப்படவில்லை. அந்தணர் ஆகிய கபிலர் என்னும் சங்ககாலப் புலவர்.

---

(5) "Jainism has not succeeded in freeing itself from the idea of caste, which has been so strong in the life of India. Even the Gods, who subsequently were reinstated in Jainism, have been arranged in social ranks... Altogether there are in heaven and hell 99 kinds of gods who are regarded as menial because they serve"
— Mrs. Stevenson, The Heart of Jainism. 270.

(6) "Even from the point of view of civil law, there are many glaring discriminatory treatments among the different castes. (Manusmriti, 8·37; 123, 124.)"
— William Theodore.

(7) "The leading vices of the Aryan race have always been drinking and gambling. The Rig-Veda bears ample witness to both."
— Zenaide A. Ragozin, Vedic India, 375.

" புலவு நாற்றத்த பைந்தடி
பூநாற் றத்த புகைகொளீஇ ஊன்துவை
கறிசோ றுண்டு வருந்துதொழில் அல்லது
பிறிதுதொழில் அறியா வாகலின் நன்றும்
மெல்லிய பெரும தாமே... "

எனவரும் புறநானூற்று வரிகளில், புலாலுணவு உண்ணுதலைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். தற்காத்துக் கொள்ளவும், பகைவரைத் தாக்கி வெல்லவும், உடல் வலிமை பெறுவதற்கு ஊனுணவு மக்களுக்கு இன்றியமையாததெனச் சீக்கியமதம் கருதுகின்றது. மனிதர்கள் உண்ணுதற்பொருட்டே, இறைவன் பிற உயிர்களைப் படைத்துள்ளனன் எனச் சில சமயத்தினர் நம்புகின்றனர். பௌத்தமதத்தில் தேரவாதம் என்னும் பிரிவைச் சேர்ந்தவர்கள், தானே கொல்லாமல், பிறர் கொன்று கொணர்ந்து தந்த ஊனை ஒருவன் உண்ணலாம் எனப் புத்தர் பெருமான் இசைவு அளித்ததாகக் கூறுவர். சுந்தன் என்பவன் தந்த பன்றி இறைச்சியுணவை யுண்டே புத்தர் பெருமான் இறந்தார், என்றும் வரலாறு உண்டு. ஓர் உயிரைக் கொல்லாமல், அது செத்தபிறகு அதன் ஊனைத் தின்னலாம் என்பது தேரவாதர் என்னும் சௌத்திராந்திக பௌத்தர்களின் கொள்கை. இது திருவள்ளுவர்க்கு உடன்பாடன்று. இப்பௌத்தக் கொள்கையினை ஆசிரியர் திருவள்ளுவர்,

" தினற்பொருட்டாற் கொல்லாது
உலகெனின், யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல் "

என்னும் திருக்குறளால் நன்கினிது மறுத்திருத்தல் காணலாம். இதனால், " கொலைப்பாவம் கொன்றார்மேல் நிற்றலின், பின் ஊனுண்பார்க்குப் பாவமில்லை "; " பின்நிகழும் தின்கை முன்நிகழும் கொலைக்குக் காரணமாகாமையின், தின்பார்க்குக் காரணத்தான் வரும் பாவமில்லை "

என வாதிக்க முயல்பவர்களின் கொள்கையைத் திருவள்ளுவர் உடன்படவில்லை என்பது தெளிவாம். திருவள்ளுவர் கடிந்து மறுத்த இத் தேரவாதப் பௌத்தக் கொள்கையினைச் சிவஞான சித்தியார் என்னும் சைவசித்தாந்த நூலும்,

'தின்னுமது குற்றமில்லை செத்தது'
எனும் புத்தா! தின்பைஎனக் கொன்று
உனக்குத் தீற்றினர்க்குப் பாவம் மன்னுவது
உன் காரணத்தால்; தின்னுதார்க்கு
வதைத்தொன்றை இடாமையினல்;
வதைத்தவர்க்கே பாவம் என்னில், உனை
ஊட்டினர்க்குப் பாவம் சேர என்ன தவம்
புரிகின்றாய்! புலால் கடவுட்கு இடாயோ!
உன் உடலம் அசுசிஎன நாணி, வேறோர்
உடல்உண்ணில் அசுசி என உணர்ந்திலை
காண் நீயே.!

என மறுத்துரைத் திருத்தல் அறிந்து மகிழற்பாலது. இவ்வுண்மை கருதினல், 'இயேசுவை விடச் சிறந்தவர்' எனப் பேரறிஞர் பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் (9) குறிப்பிடுகின்ற புத்தர்பிரானைக் காட்டிலும் திருவள்ளுவர் ஒருவகையிற் சிறந்தவராதல் தெளியலாம்.

---

(8) "It is lawful for a freeman to marry four wives, whether free or slaves".

—Hidaya, 1.2, 1·88.

(9) "I cannot myself feel that either in the matter of wisdom or in the matter of virtue Christ stands quite as high as some other people known to history. I think I should put Buddha and Socrates above Him in these respects".

—Bertrand Russel, Why I am not a Christian.

"According to the scriptures of the Theravada school, the Buddha allowed his followers to eat flesh if they were not responible for killing the animal providing the meat and if it was not specially killed to them.

To this day most Buddhists in ceylon and other lands where Theravadam prevails seat meat and fish, which are supplied by Muslim or Christian butchers or fishermen".

—Sources of Indian Tradition.

## தெருள்நோக்கு :

மேலும், புத்தர் பெருமான் உலகவாழ்வின் ஒரு கூறுபற்றியே ஓர்ந்துணர்ந்து, "பிறந்தார் உறுவது பெருகிய துன்பம், பிறவார் உறுவது பெரும்பே ரின்பம் ; பற்றின் வருவது முன்னது ; பின்னது அற்றோர் உறுவது அறிக" என்று அறிவுறுத்தி யருளினர். ஆனால் திருவள்ளுவரோ, உலகவாழ்வின் இயலைப் பல கோணங்களிலும் ஓர்ந்துணர்ந்து ஆராய்ந்து, அதனது பலதிற நிலைகளையும் (Comprehensive and Compact) விளக்கியருளினர். மற்றும், புத்தர் பெருமான் உலகியல் வாழ்வைப் பொறுத்த அளவில் ஒரு மருள்நோக்கினர் (Pessimist) எனவே விளங்குகின்றார். ஆனால் திருவள்ளுவரோ தெருள்நோக்கினர் (Optimist) எனச் சிறந்து திகழ்கின்றார்.

"இடுக்கண் வருங்கால் நகுக ; அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது இல்"

"நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள்"

எனவரும் திருக்குறட் பாக்களே, இதனை மலையிலக்கென விளக்கா நிற்கும். இவ்வாற்றாலும் திருவள்ளுவரின் பலதிறச் சிறப்புக்களையும் நாம் கருதியுணர்ந்து மகிழலாம்.

## மழித்தலும் நீட்டலும் :

(12) பண்டைக்கால மக்களுள் ஒவ்வொரு சாரார், ஒவ்வொரு வகையில் தவவொழுக்கம் பற்றிய கருத்துக்களைக் கொண்டிருந்தனர். ஒரு சிலர் சடைமுடியை நீட்டி வளர்ப்பதே தவம் என்று கருதினர் ; வேறு சிலர் காம்பறத் தலை சிரைத்துக் கொள்வதே தவம் என்று எண்ணினர் ; மற்றும் சிலர் தலையிலுள்ள மயிரினைச் சுடுபாறையிற் கிடந்து ஒவ்வொன்றாகப் பறித்துப் போடுதலே தவம் என்று கொண்டனர். இஃது இக்காலத்தில் ஏதோ எளியது போலத் தோன்றினும், பண்டைக்காலத்தில் இத்தகைய செயல்களுக்குப் பெருமதிப்பும் விளைவும் இருந்தன. (10) இப்போதும் இத்தகைய மனப்பான்மைகள் மக்களிடையில் இருந்து வருதலைக் காணலாம். நாகரிகம் மிக்க முற்போக்காளர் என்பதும், நாகரிகம் அற்ற பிற்போக்காளர் என்பதும், அவரவர் தம் தலைமுடி நிலைகளைக் கொண்டு இப்போதும் கணிக்கப்படுகின்றன.

திருவள்ளுவர்க்கு இன்னோரனைய செயல்கள் உடன்பாடு அல்ல. அவர் இவற்றை அறவே வெறுத்தார். தவம் செய்வார்க்குத் தலைமயிரை மழித்தலும் சடையாக நீட்டி வளர்த்தலும் ஆகிய வேடங்கள் வேண்டுவதில்லை ; உலகோர் பழிக்கின்ற குற்றங்களைத் தம்பால் நிகழவொட்டாமல் நீக்கி விடுதலே அமையும் என்பதே திருவள்ளுவரின் திருவுள்ளம்.

"மழித்தலும் நீட்டலும் வேண்டா ;
உலகம்
பழித்த தொழித்து விடின்"

என்னும் திருக்குறளால் வைதிகம் சமணம் பௌத்தம் ஆகியவற்றைச் சார்ந்த மக்களின் போலி வேட நிலைகளைத் திருவள்ளுவர் கடிந்துரைத் திருத்தல் காணலாம்.

## உழைப்பின் உயர்வு :

(13) திருவள்ளுவர் காலத்துச் சமுதாய மக்களில் சிலர், உடலுழைப்பை இழிவாகக் கருதினர். உடலுழைப்பு இல்லாதவர்கள் உயர்ந்தவர்கள் என்றும், உடலுழைப்பை மேற் கொள்ளுபவர்கள் இழிந்தவர்கள் என்றும், பொதுவாக ஒரு தவறான கருத்து, அக்காலத்தில் நிலவியிருந்ததாகத் தெரிகின்றது. அவ்வடிப்படையிலேயே வருணைச் சிரமப் பாகுபாடுகளும், சாதி வேறுபாடுகளும் ஏற்படலாயின. வைதிக மதத்தினர் பலவகை யாகங்களைச் செய்வதில் முனைந்திருந்தனர். சமண பௌத்தர்களோ பற்றற்ற துறவு நெறி வாழ்க்கையைக் கடைப்பிடிக்கலாயினர். இந்நிலையில் உழைப்பின் உயர்வு (Dignity of Labour) பற்றி, மக்களிற் பெரும்பாலோர் நன்குணரவில்லை. 'எளிய சுவையற்ற புல்லிய நீர்த்த கூழேயானாலும், ஒருவன் தானே முயன்று உழைத்துத் தேடிப் பெற்றதென்றால், அதனைவிடச் சுவை மிகுந்த சிறந்த நல்ல உணவு வேறெதுவும் இல்லை' என்கின்றது குறள்.

"தெண்ணீர் அடுபுற்கை ஆயினும்,
தாள்தந்தது
உண்ணலின் ஊங்கினியதுஇல்"

என்னும் திருக்குறளால், திருவள்ளுவர் உழைப்பின் உயர்வினை உலகுக்கு அறிவுறுத்தி

(10) "It is interesting to note that a sect and an Upanishadic text bear the same name, Mundak. A special feature of this sect was that its members shaved their heads. The shaving of the head instead of wearing long hair seem to have been common to both Vedic and non-Vedic sects as appears from a reference in the Suttanipata."

—2500 years of Buddhism, p, 11.

யருளினர். 'உழவு' என்னும் தனி அதிகாரமும் வகுத்து, உழைப்பின் உயர்வினையும் தொழிலின் மேன்மையையும் விளக்கினர்'. இன்று செய்யாமை (அகிம்சை) என்பதனைத் தலைக்கீடாகக் கொண்டு, ஒரு சிலர் (11) உழவு தொழிலை இகழ்ந்து புறக்கணித்தலைத் திருவள்ளுவர் உடன் பட்டிலர்.

## கொல்லாமை :

(14) திருவள்ளுவர் கொல்லாமை அறத்தினைப் பெரிதும் போற்றியவர். 'ஒன்றாக நல்லது கொல்லாமை' என்பது அவர்தம் முடித்த முடிபு. 'எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும் மாணா செய்யாமை தலை' என்பது அவருடைய கொள்கை. 'ஒருவன் தன்னைக் கொல்ல வரும் பசுவைக் கொல்ல முற்படுதல் தவறாகாது' என்று மனு முதலோர் கூறும் கருத்து, திருவள்ளுவரின் திருவுள்ளத்திற்குப் பொருந்துவதன்று. நோய்க்கு மருந்தாதற்காகவேனும், நேர்த்திக் கடன் செலுத்தும் முறையாகவேனும், சாந்தி செய்தற் பொருட்டாக வேனும், வேறு பிற எக் காரணங்கள் குறித்தேனும், ஒருவன் பிறிதொன்றின் உயிரினைக் கொல்லுதல் ஆகாது என்பது, திருவள்ளுவரின் ஆணை.

"தன்னுயிர் நீப்பினும் செய்யற்க ;
தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை"

---

(11) "The principle of Ahimsa is nowhere so rigorously practised as among the Jain monks......This has, of course, led even the laymen, of whom not so strict a practice has been required, to refrain from any means of livelihood which might cause the direct destruction of life. Thus there are few Jain farmers, since it is next to impossible to avoid killing insects, worms etc, when tilling the soil. They are more often found in commerce or banking or in other professions."

—The world's Living Religions, p. 51
Robert Ernest Hume, Ph. D., D. Theol.

## செய்யற்க பழிக்கும் வினை :

(15) செய்யப்படும் வினைகள், பொருளேயன்றி அறமும் புகழும் பயந்து நல்லனவாதல் வேண்டும்; செய்யும் செயலின் முடிவு மட்டுமேயன்றி, அதனைச் செய்யும் முறையும் தூயதாக அமைதல் வேண்டும் என்பது திருவள்ளுவர் கருத்து. 'செயலின் முடிவு நல்லதாயின், செய்யும் முறை எதுவாயினும் நன்றேயாகும்' (End justifies the means) என்பது காந்தியடிகளைப் போலவே திருவள்ளுவர்க்கும் உடன்பாடன்று. மனுமிருதி போன்ற அறநூல்கள் "வயதுமுதிர்ந்த மூப்பினராய இருமுதுகுரவரும், கற்புடை மனைவியும், குழவியும் பசியான் வருந்தும் எல்லைக்கண், தீயன பலவும் செய்தாயினும் புறந்தருக" என விதிக்கும். திருவள்ளுவர் அதனைச் சிறிதும் உடன்படார். "தன்னைப் பெற்ற அன்னையின் பசியை வறுமையாற் கண்டு வருந்தும் தன்மையன் ஆயினன் எனினும், அது சுட்டி அறிவுடையார் பழிக்கும் இழிசெயல்களை ஒருவன் செய்தல் கூடாது" எனத் திட்டவட்டமாகப் பணித்தருள்வர் திருவள்ளுவர்.

"ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும்,
செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை"

## வடநூல் முறை :

(16) "ஒருவன் தன் உயிர்க்கு இறுதி நேர இருக்கும் நெருக்கடி நிலையில், இளிவந்தன எது செய்தாயினும், தன் உயிரைக் காத்துக் கொள்ளலாம்" எனச் சில அறநூல்கள் செப்பும். இதனை 'ஆபத்துத் தர்மம்' என வியாசபாரதம் குறிப்பிடும். பீஷ்மாசாரியர் தாம் உயிர்துறக்கும் முன்பு தருப்பசயனத்தில் இருந்து, இதுபற்றிப் பாண்டவர்க்கு உபதேசித்துள்ளார். 'ஆபத்துக்குப் பாவம் இல்லை' என்னும் உலகப் பழமொழியும் இதனை ஒட்டியே உண்டாகி வழங்குவதாயிற்று. திருவள்ளுர்க்கு இஃது உடன்பாடன்று. "ஒருவன் எஞ்ஞான்றும், தன் நிலையில் தாழாதிருத்தல் வேண்டும். ஒரோவழி ஊழால் தாழ்வு வந்துழி அவன் உயிர்வாழாமல் இறத்தல் வேண்டும். ஒருவனுக்கு நாணுடைமை உயிரினும் சிறந்தது. நாணமும் உயிரும் தம்முள் மாறுயவழி, ஒரு மனிதன் தன் நாணம் சிதையாமைப் பொருட்டு உயிரைத் துறத்தல் வேண்டும்; அஃதன்றி உயிரின் பொருட்டு நாணத்தைத்

துறத்தல் ஆகாது '' என்பதே திருவள்ளுவரின் தெளிந்த முடிபு.

'' இன்றி யமையாச் சிறப்பின ஆயினும்,
குன்ற வருப விடல் ''

எனவரும் திருக்குறளால், இவ்வுண்மையை யாவரும் இனிது உணரலாம். இக் குறட்பாவின் கருத்தை, '' இறப்ப வருவழி இளிவந்தன செய் தாயினும் உய்க என்னும் வடநூல் முறையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும், மானத் தினது நிலையுடைமையையும் தூக்கி அவை செய்யற்க என்பதாம்'' என ஆசிரியர் பரி மேலழகர் அழகுற விளக்கியிருத்தலும், இவ் வுண்மையை வலியுறுத்தும் இனிய சான்றாகும்.

## கௌடில்யர் :

(17) திருவள்ளுவரின் சிறப்பு, அவரை வேறு பிற ஆசிரியர்களோடு ஒப்பிட்டுக் காண்ப தனாலும், மிகவும் நன்கினிது நமக்குப் புலப்படும். திருக்குறளின் பொருட்பாலைக் கௌடில்யரின் அர்த்த சாத்திரத்திற்கும், காமத்துப்பாலை வாத்சா யனரின் காமசூத்திரத்திற்கும் சிலர் ஒப்பிடுதுண்டு. அஃது ஒரு புடை ஒப்புமை யாகுமேயன்றி, முழு வதும் ஏற்புடைத்தாகாது. கௌடில்யரின் அர்த்த சாத்திரத்தில் உழவுக்கும் உழவருக்கும் ஒரு சிறிதும் முதன்மையளிக்கப்படவில்லை. அரசன் குடிமக்களை அச்சுறுத்தியும் வற்புறுத்தி யும் தனது வருவாயைப் பெருக்கிக் கொள்ளலாம் என்று கூறி, நீண்டதொரு வரிப்பட்டியலையும் அர்த்த சாத்திரம் வகுத்துத்தந்துள்ளது. வருணச் சிரம சாதிப்பாகுபாடுகளை அடிப்படையாகக் கொண்டே அர்த்த சாத்திரம் அமைந்துள்ளது. நீதிநெறி பிறழாமல்தான் ஒருவன் பொருளீட்டு தல் வேண்டும் என்று குறள் கூறும் நெறிக்கும், பொருளீட்டுதலில் நீதிபற்றி ஏதும் நினைக்க வேண்டுவதில்லை எனப் போதிக்கும் இயல்பிற் செல்லும் அர்த்த சாத்திரத்திற்கும் ; உள்ள இடையீடு மிக மிகப் பெரிது.

குடிமக்களின் கரவின்மை அறியாமை மூட நம்பிக்கை சமயவுணர்வு ஆகியவற்றைப் பயன் படுத்திக் கொண்டு, ஓர் அரசன் தன் பணப் பெட்டியை நிரப்பிக் கொள்ளலாம் எனக் குறிப் பிற் புலப்படுத்தி, அதற்குரிய வழி வகைகளையும் கௌடில்யர் வகுத்துரைக்கின்றார். மேலும் கட்குடி இணைவிழைச்சு என்பன போன்ற இழி செயல்களுக்கும் அரசு ஊக்கம் அளித்து, அவ் வாற்றாலும் வருவாயைப் பெருக்கிக் கொள்ளலாம் என்பது அதன் கொள்கை. இவைகளெல்லாம் திருவள்ளுவர்க்குச் சிறிதும் உடன்பாடு அல்ல.

'' அழக்கொண்ட எல்லாம் அழப்போம் ;
இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை ''

'' வேலொடு நின்றான் இடுஎன்றது
போலும்
கோலொடு நின்றான் இரவு ''

'' அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீர்
அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை ''

என்பன திருவள்ளுவர் அறிவுரை. இங்ஙனமே அறநெறியைப் பொருட்படுத்தாமல் புறக் கணித்துத் தீயசூழ்ச்சித் திறங்கள் பலவற்றைக் கூறும் மாக்கியவெல்லி (Machiavelli) யின் கருத் துக்கள் பலவும், திருவள்ளுவர்க்கு உடன்பாடு உடையன அல்ல. ஓர் அரசன் நரியைப் போன்ற சூழ்ச்சித் திறம் மிக்கவனாதல் வேண் டும் என்பது மாக்கிய வெல்லியின் கொள்கை. அரசன் அரிமாப் போன்ற பெருமித இயல்புடைய வனாகப் பிறங்குதல் வேண்டும் என்பது திரு வள்ளுவர் கொள்கை. இதுவே இவ்விருவருக்கும் உள்ள இடையீட்டின் அளவை நம்மனோர்க்குப் புலப்படுத்தப் போதியதாகும்.

## வாத்ச்யாயனர் :

(18) இவ்வாறே திருவள்ளுவரும் வாத்ச் யாயனரும் ஒருவரோடொருவர் நெடுந்தொலை வினர். திருவள்ளுவர் தூய தெய்விகக் காதலை விளக்கினர் ; வாத்சாயனர் தீய இழிந்த காமத் திறன் பற்றி விரித்துரைத்தனர் ! பாலுணர்ச்சி யைத் தூண்டிவிடுவது, வளரச் செய்வது, நீடு நிலை பெறுத்துவது பற்றியெல்லாம், வாத்ச்யாய னரின் காமசூத்திரம் விவரிக்கின்றது. 'ஆண் பெண் சேர்க்கையில் நிகழும் பலதிறச் செயல்கள் நிலைகள் பற்றியெல்லாம் வாத்ச்யாயனர் வரு ணிப்பர். பிறன் மனைவியை மயக்கிக் கெடுப்பதற் குரிய வழிகளையும் கூடக் காமசூத்திரம் கட் டுரைக்கும். பரத்தைமைப் பண்பும் செயல்களும் பற்றிக் கூட, அது பாரித்துரைக்கக் காணலாம். (12) இன்னோரன்ன இழிதகவுகள் எதுவும்திருக் குறளிற் காணப்படமாட்டா.

## பிளேட்டோ :

(19) திருவள்ளுவர்க்கு மேலைநாட்டுப் பேரறிஞர்களான பிளேட்டோ, அரிஸ்டாட்டில் போன்றவர்களும், சிறிதும் ஈடாக மாட்டார்கள். பிளேட்டோ கண்ட குடியரசு அளவாற் சிறியது; நகர—நாடு (City—state) எனத் தக்கது; குடி மக்களின் தொகையிலும் செல்வ நிலையிலும் வளர்ச்சியற்ற தேக்கமுடையது. பேச்சுரிமைக் குறைப்பு முதலிய பலவகைக் கட்டுப்பாடுகள் அங்கு உண்டு. தனிநிலையிற் குடும்ப வாழ்வின் இன்பமும், குழந்தை வளர்ப்புரிமையும் அங்கே அநுமதிக்கப்பெறமாட்டா. கவிஞர்கள் அங்கே மதிக்கப்பெறார். மெலிந்தோர் நலிந்தோர் புறக் கணிக்கப்படுவர். மனைவியரும் குழந்தைகளும் அங்கே பொதுவாக்கப்படுவர். திருவள்ளுவர் கூறும் கற்பு முதலிய பண்புகளுக்கு அங்கே ஒரு சிறிதும் இடமில்லை.

## அரிஸ்டாட்டில் :

(20) அரிஸ்டாட்டிலின் கருத்தின்படி அடிமைமுறை இன்றியமையாதது; உயர்வு தாழ்வுகள் இயல்பானவை; இழிநிலை பிறவியிலேயே அமைந்தது; குடியாட்சி என்பது கிரேக்கர்களுக்கு மட்டுமேயுரியது. ஏனையரெல்லோரும் நாகரிகமற்ற இழிசினரே (Barbarians) ஆவர். செல்வம் தேடுதற்கும் நீதிநெறி முறைகளுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. இத்தகைய கருத்துக்களெல்லாம் திருவள்ளுவர் உடன்படாதவை. இவைகளெல்லாம் திருக்குறளில் ஒரு சிறிதும் காணப்பட மாட்டா.

## முடிவுரை :

இங்ஙனம் நீளநெடுக நினைந்துணர்ந்து ஆராய்ந்தால், திருவள்ளுவர் உடன்படாத கொள்கைகள் பலவற்றை, நாம் நன்கினிது அறிந்து நனிமிக மகிழலாம். திருவள்ளுவரின் தனிப்பெஞ் சிறப்பையும், திருக்குறளின் ஒப்புயர் வற்ற பெருமையையும் செவ்விதின் உணர்ந்து தெளிந்து கொள்ளுதற்கும், இத்தகைய ஆராய்ச்சிகள் பெருந்துணை புரியும்! திருவள்ளுவரையும், திருக்குறளையும் நம்மனோர் அனைவரும் நன்கினிது போற்றி, நலம்பலவும் எய்தி உய்ய முயலுவோமாக! வாழ்க திருவள்ளுவர்! வளர்க திருக்குறள்!

— ஆசிரியர்

---

(12) "Kamasutra of Vatsyayanar deals with erotology. It was meant to induce, incite and prolong the sex passion. It deals with physical acts, manipulations and postures in sex unions, and abounds in revolting descriptions and obscene situations. Vatsyayanar reaches the depth of his degradation when he formulates the technique of seducing the wife of another. We have none of these in Thiruvalluvar".





தஞ்சை மாவட்டம் திருத்துறைப்பூண்டி பிறவி மருந்தீசுவரர் கோயிலில் அறங்காவலர் கூட்டமண்டபத்திற்கு அடிக்கல் நாட்டுவிழா நிகழ்ந்தபொழுது முன்னாள் ஆணையர் திரு. இரா. இராமசுப்பிரமணியம், B.Sc., B.L., தஞ்சைத்துணை ஆணையர் திரு. டி. என். சிங்காரவேலு, B.A., B.L., நாகப்பட்டினம் உதவி ஆசிரியர் திரு. பி. புலியூருடையான் ஆகிய பெருமக்கள் கலந்துகொள்ளுதல். (20—8—1969).

# உண்மை விளக்கம்

(முற்றொடர்ச்சி)

## திருவைந்தெழுத்து :

இறைவனையும் அவன்றன் அளப்பெருஞ் சிறப்புக்களையும் நம்மனோர் நினைவில் எழுப்பி, அவனை வழிபடப் பயன்படும் ஆற்றல் மிக்க அரும்பெருஞ் சொற்றொடர்கள் மந்திரங்கள் எனப் போற்றப்பெறும். அவற்றுளெல்லாம் தலை சிறந்து திகழ்வது அஞ்செழுத்தேயாகும். "அது பற்றி அதனை "மந்திர ராஜம்" என்பர். "ஆதி மந்திரம் அஞ்செழுத்து ஓதுவார் நோக்கும் மாதி ரத்தினும் மற்றைய மந்திரவிதி வருமோ?" எனப் பஞ்சாக்கரத்தின் பெருமையினைச் சேக்கிழார் பெருமான் பறைசாற்றுவர். இத்தகைய மந்திரத்தில் சி சிவத்தையும், வ அருளையும், ய உயிரையும், ந மறைப்பாற்றலையும், ம மலங்களையும் குறிக்கின்றன. இதனை,

"சிவன்சத்தி சீவன் செறுமல மாயை
அவஞ்சேர்ந்த பாச மலம்ஐந் தகலச்
சிவன்சக்தி தன்னுடன் சீவனர் சேர
அவஞ்சேர்த்த பாசம் அணுக கிலாவே"
"சிவனருள் ஆய சிவன்திரு நாமம்
சிவனருள் ஆன்மா திரோதம் மல
மாயை
சிவன்முத லாகச் சிறந்து நிரோதம்
பவம தகன்று பரசிவன் ஆமே"

எனவரும் திருமந்திரப் பாடல்களாலும் உணரலாம். மலமாயா கன்மங்களைக் குறிக்கும் நம என்பதனை முன்வைத்து நமசிவாய என்னும் தூல பஞ்சாக்கரத்தை ஓதினால் மும்மலங்கள் நீங்கா. சிவபிரானையும் திருவருளையும் நினைப்பிக்கும் சிவ என்பதனை முன்வைத்துச் சிவயநம என்னும் சூக்கும பஞ்சாக்கரத்தை ஓதினால் இன்பத்தே வாழலாம். அஞ்செழுத்தை விதிப்படி உச்சரித்தல் இன்றியமையாதது. இதனை அருள் நந்தி சிவமும் வற்புறுத்தியிருத்தல் உளங் கொளத்தக்கது.

"ஓசைதரும் அஞ்செழுத்தை
விதிப்படி உச்சரிக்க
உள்ளத்தே புகுந்தளிப்பன்
ஊனமெலாம் ஓட"

"அஞ்செழுத்தை விதிப்படி
உச்சரிக்க மதியருக்கன்
அணையரவம் போல் தோன்றும்
ஆன்மாவில் அரனே".

## அத்துவித முத்தி :

நாதன் நடத்தாலும் அஞ்செழுத்தாலும் உயிர்களுக்கு நிகழ்வது வீடுபேறு ஆகலின், அதன் இயல்பு பற்றியும் ஈண்டு ஆசிரியர் விளக்கத் தலைப்படுகின்றார். முத்தியின் இயல்பைப் பல்வேறு வகையிற் பலர் கூறுவராகலின், அதன் உண்மைத்திறம் குறித்து விளக்குதலும் ஈண்டு ஆசிரியர்க்குக் கடமை ஆயிற்று.

முத்தி நிலையிற் சிவமும் ஆன்மாவும் பழமும் சுவையும் போலவும், மலரும் மணமும் போலவும் வீணையும் இசையும் போலவும், ஒன்றாகாமல் இரண்டாகாமல் ஒன்றும் இரண்டும் இன்றாகாமல் அத்துவிதமாய் இயைந்து நிற்கும். வியாபகமும் வியாப்பியமுமான இருபொருள் ஒரு தன்மையான் ஒற்றுமைப் பட்டு நிற்கும் தாதான்மிய சம்பந்தமே அத்துவிதம் எனப்படும். சார்ந்ததன் வண்ணமாந் தன்மையுடைய உயிர் பெத்த நிலையில் ஆணவத்தோடு இயைந்து அதன் வழிநின்றாற் போல, முத்தி நிலையிற் சிவத்தோடு இயைந்து அதன் வழி நிற்கும். இதனை,

"ஆணவத்தோ டத்துவிதம்
ஆனபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதம்
சாரும்நாள் எந் நாளோ?"

எனத் தாயுமானவர் அருளிச் செய்திருத்தல் கொண்டுணரலாம்.

முத்திநிலையில் ஆன்மாக்கள் சிவத்தோடு சமமாகும் என்பர் சிவசமவாதிகள். சிவசமமாகி விடுமாயின், அவைகளும் ஐந்தொழில் நடத்தும் உரிமை பெற்று உலகிற்குக் கடவுளர் பலர் என முடியும். சூரியனின் ஒளியால் தான் ஒளியைப் பெற்று அதற்குச் சமமாதல் இன்றி, அதன் ஒளியில் தன்னொளி அடங்கி இயைந்து நிற்கும் சந்திரனைப் போல, ஆன்மாவும் சிவ வியாபகத்திற்குள் அடங்கிச் சிவானுபவ நுகர்ச்சி ஒன்றிற்கு மட்டுமே உரிமையுடையதாய்ச் சிவத்தோடு பிரிப்பின்றி இயைந்து நிற்கும்.

''வெய்யோன் ஒளியின் ஒடுங்கிவிளங்காது
வெய்யோனை ஆகாத மீன்போல. . .

எனவரும் சிவஞானபோத வெண்பாவும் ஈண்டு உணரற் பாலது. திருநாவுக்கரசர் ''எண்குணத்துளோமே'' என அருளிச் செய்த தன்றி ''எண் குணங்கள் எய்தினோமே'' எனக் கூறுமையும் குறிக்கொள்ளத் தக்கது.

முத்தி எய்துங்கால் ஆன்மாவானது சிவத்தைச் சென்று சேரும் எனின், சிவத்தின் வியாபகத் தன்மைக்கு இழுக்கு நேரும். சிவமே ஆன்மாவை வந்து பொருந்தும் எனின், முன்பெல்லாம் சிவம் ஆன்மாவிற்கு வேருகப் பிரிந்து (அந்நியமாக) இருந்தது என்னும் குறைநேரும். கண்ணின் பார்வையை மறைத்து நின்ற படலத்தை மருத்துவன் உரித்துத் தீர்த்தவழி, கண் சூரியனைச் சென்று சேருவதும் இல்லை; சூரியன் கண்ணை வந்து அடைவதும் இல்லை நின்றுங்கு நின்றே கண்ணொளியானது, சூரியனின் ஒளியால் பொருள்களைக் கண்டுணர வல்லதாகின்றது. அதுபோல ஆணவமாகிய படலம், இறையருளின் துணையால் நீங்கப் பெற்ற முத்தி நிலையில், ஆன்மஞானம் இயல்பாக விளங்கப் பெற்று எதனையும் அறியவும் அனுபவிக்கவும் வல்லதாகும்.

சிவம் ஆன்மாவை வந்து பொருந்துவதும் இல்லை. ஆன்மா சிவனைச் சென்று சேர்வதும் இல்லை. சிவவியாபகத்திற்குள் ஆன்மா அத்துவிதமாய்ச் செறிந்து நிற்கும். இதுபற்றியே ''சென்றடையாத திருவுடையான்'' என இறைவனைத் திருஞான சம்பந்தர் போற்றியருளினர்.

## முத்திநிலையில் முப்பொருள்கள் :

சைவசித்தாந்தம் சற்காரிய வாதத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதனை முன்பே கண்டோம். ''உள்ளது போகாது இல்லது வாராது உள்ளதே உள்ளது'' என்னும் கொள்கையே சற்காரியவாதம் எனப்படும். இக்கொள்கையின்படி, உலகில் இருக்கின்ற ப்பொருள்களும் அழிய மாட்டா (Indestructibility of matter) என்பது தெளிவு.

அதனால் முத்தி நிலையிலும் முப்பொருள்களும் உண்டு என்பது தேற்றம்.

''கரும்பைத் தேனைப் பாலைக்
கனியமுதைக் கன்டைக்
கட்டியை ஒத்திருப்பன் அந்த
முத்தினியிற் கலந்தே''

என்றுற்போல், முத்திநிலையில் ஆன்மாவுக்கு இன்பம் தருபவன் ஆகிய இறைவன் உளன். ''உயிர்தானும் சிவானுபவம் ஒன்றனுக்கு உரித்தே'' என்றபடி, சிவானுபவத்தை நுகரப் பெறுவதாகிய ஆன்மாவும் உளது. ''ஆணவந்தான் அனுதி, அந்தம் அடையாது ஆகும்''. ஆதலால் ஆணவமும் முத்திநிலையில் உண்டு. இரத குளிகையிலிட்ட செம்பினிடத்து அழிந்த களிம்பும். அவுடதத்தால் தடுப்புண்ட விடமும், ஒளி முன்னர். ஒளி முன்னர் இருளும், தேற்றுங் கொட்டை சேர்ந்த கலங்கல் நீரும் போல, ஆணவமலம் தான்மாயாமல் தன் சக்தி மட்டும் மாய்ந்து தேய்ந்து தேய்ந்து முத்திநிலையிற் செயலற்றிருக்கும்.

## '' இன்பம் விளைவித்தல் மலம் ''

உண்மை விளக்கத்தில் மிகவும் சிறந்த முதன்மையான செய்யுட்களுள் ஒன்றுகத் திகழ்வது முத்திநிலையைப் பற்றிக் கூறும் பின்வரும் செய்யுளாகும்.

''முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தஅனு போகத்தைத்துய்த்தல் அணுசு ; மெத்தவே
இன்பங் கொடுத்தல்இறை ; இத்தை விளை வித்தல்மலம் ;
அன்புடனே கண்டுகொள் அப்பா''

இச் செய்யுளில் அறிஞர்களிடையே பெரிதும் மலேவினை யுண்டாக்கும் பகுதியாக விளங்குவது, 'இத்தை வினைவித்தல் மலம்' என்னும் பகுதியாகும். முத்தி நிலையிலும் ஆணவம் உண்டு எனக் கொள்ளினும், தீங்கே பயக்கும் இயல்பிற்ருகிய ஆணவமலம் நன்மை செய்வதாக முத்தி நிலையில் எங்ஙனம் மாறும்? பொருளியல்பு அழிந்தால் பொருளும் அழியும் அன்ருே என, நம்மனோர்க்கு ஐயம் நிகழ்தல் இயல்பு. அது குறித்துப் பலவகையில் அமைவுரைகள் கூறலாம்.

(1) "நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின்" மின் என்ருற்போல, ஆணவமலத்தால் அடைந்த அளப்பருந் துன்பங்களால், முத்தி நிலையில் ஆன்மாவுக்குச் சிவானுபவ நுகர்ச்சியின் சிறப்பு மேம்பட்டுத் தோன்றும். "துன்புளது எனின் அன்ருே சுகம் உளது?" (கம்பர்); "துன்பம் உற்றவர்க்கலால் இன்பம்இல்லை" (சிந்) என்பன ஈண்டுணரற்பாலன. திருநாவுக்கரசர் தாம் மீண்டும் சிவநெறி திரும்புதற்குக் காரணமாய் இருந்தமை பற்றித் தமக்கு ஆற்ருெணுத் துன்பம் விளைத்த கொடிய சூலை நோயையும் மகிழ்ந்து, 'யான் இதற்கு என்ன கைம்மாறு செய்வேன்' என நன்றி பாராட்டித் தொழுதனர். இதனை "இவ்வாழ்வு பெறத்தரு சூலையினுக்கு எதிர் செய்குறை என்கொல்? எனத் தொழுவார்" எனச் சேக்கிழார் பெருமான் திருவாய் மலர்ந்தருளியமையும் ஈண்டுச் சிந்திக்கத் தகும்.

(2) நாம் பிறர்க்கு ஒல்லும் வகையானெல்லாம் உதவி செய்தல் வேண்டும். உதவி செய்தல் இயலாவிட்டாலும் தீமை செய்யாமலாவது இருத்தல்வேண்டும். நன்மை செய்யாவிட்டாலும் தீமை செய்யாமலாவது இருப்பதும், ஒரு வகையில் உதவியேயாகும் எனலாம்.

"நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்! அதுதான்
எல்லாரும் உவப்ப தன்றியும்,
நல்லாற்றுப் படூஉம் நெறியுமார்
அதுவே"

எனப் புறநானூற்றுப் புலவர் ஒருவர் பாடியது போல, இதுகாறும் சிவஞானவிளைவுக்குத் தடையாய்த் தீங்கே பயந்து வந்த கொடிய ஆணவமலம், தன் ஆற்றல் அழிந்து யாதொரு கேடும் சூழ்தலின்றிச் செயலற்றிருப்பதுதானே, முத்தி நிலையில் "காழில் கனி" போலும் சிவானுபவம் நுகர ஆன்மாவிற்குத் துணையாவதாயிற்று. இதனை "எதிர்மறையுதவி" (Negative help) எனக் கூறலாம்.

(3) ஒருபொருளுக்கு அதன் இயற்கைப் பண்பு என்றும் மாறுபடாது என்பது தெளிவு. அறியாமை விளைவித்தல் ஆணவமலத்தின் இயல்பு. பெத்த நிலையில் ஆணவமலம் ஆன்மா சிவத்தை அறியாமற் செய்யும். முத்தி நிலையில் அஃது ஆன்மா உலகத்தை அறியாமல் மறைக்கும். சார்ந்ததன் வண்ணமாந் தன்மையாற் பொருள்களை அதுவதுவாய் நின்று அநுபவிக்கும் இயல்பிற்ருகிய ஆன்மா, சிவத்தையன்றி ஏனையவற்றையும் அறியத்தலைப் பட்டுழிச் சிவானுபவ விளைவிற்கு இடையூருய்க் குறைவுபடும். எனவே, ஆணவமலம் முத்தி நிலையில் உலகத்தை அறியாமல் செய்வது, ஆன்மா சிவத்தை முழுதாக நன்கினிது அநுபவித்தற்குத் துணைபுரிவதாகின்றது.

(4) இன்ப நுகர்ச்சிக்கு நுகர்வதும் நுகரப்படுவதும் ஆகிய இருபொருள்கள் இருத்தல் வேண்டும். அவ்விருபொருள்கள் தனித்தனியே பிரிந்து இருப்பின் இன்பம்நிகழாதாகலின், அவை இரண்டறப் பிரிப்பின்றி இயைதலும் வேண்டும். இங்ஙனம் பொருள்கள் ஒரு வகையில் இரண்டாயும், பிறிதொரு வகையில் ஒன்ருயும் இயைந்து நின்ற வழியே இன்பநுகர்ச்சியுண்டாம். அதுபோது 'யான் இதனை நுகர்கின்றேன்' என்னும் தன்னுணர்வு (Self-conciousness, not egotism) நிழுகம் அது நிகழப் பெற்ருல்தான், இன்ப நுகர்ச்சி மேலும் மிகுதிப்பட்டுச் சிறந்தோங்கும்.

"ஆனந்த வெள்ளத் தழுந்துமொர்
ஆருயிர் ஈருருக்கொண்டு
ஆனந்த வெள்ளத் திடைத்திளைத்தால்
ஒக்கும்; ஐய! மெய்யே
ஆனந்த வெள்ளத் தறைகழலோன்
அருள் பெற்றவரின்
ஆனந்த வெள்ளம்வற் ருதுமுற்ருது;
இவ் வணி நலமே"

"செழுநீர் மதிக்கண்ணிச் சிற்றம்
பலவன் திருக்கழலே

கெழுநீர் மையிற் சென்று கிண்கிணி
வாய்க் கொள்ளும் கள்ளகத்த
கழுநீர் மலர்இவள் ; யான் அதன் கண்
மருவிப் பிரியாக்
கொழுநீர் நறப்பருகும் பெரு
நீர்மை அளிகுலமே''

எனவரும் திருச்சிற்றம்பலக் கோவையார் செய்யுட்களும் பிறவும், இவ்வுண்மையைவற்புறுத்தும். முனைப்பை விளைவிக்கும் இயல்பிற்றாகிய ஆணவ மலம் தன் ஆற்றல் அழிந்து முத்தி நிலையிற் பேரின்பத்தை அநுபவிக்கும் ஆன்மாவிற்கு நான் அனுபவிக்கின்றேன் என்னும் தன்னுணர்வை விளைவித்துச் சிவானுபவ நுகர்ச்சி மேலோங்கிச் சிறத்தற்குத் துணையாக நிற்றலின், ''இத்தை விளைவித்தல் மலம்'' என ஆசிரியர் குறிப்பிட்டார்.

''கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்
கருணை
வெள்ளத் தழுந்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குச் சிற்றம் பலம்
மன்னும்
ஒல்லை விடையானைப் பாடுதுங்காண்
அம்மா னாய்''

எனவரும் திருவாசகத் திருப்பாடல், முனைப்பை விளைவிக்கும் ஆணவமலம், முத்திநிலையில் ஆன்மாவுக்குத் தன்னுணர்வை மட்டுமே நிகழ்த்தியமையும் வகையில், அதன் ஆற்றலைத் தேய்ந்தழியச் செய்தருளும் சிவபிரானின் பெருங்கருணைத்திறத்தினையே வியந்து புகழ்ந்ததாகவும் கொள்ளலாம்.

## குருலிங்க சங்கம வழிபாடு :

முத்திநிலை பற்றி விளக்கிய ஆசிரியர், இனி அம்முத்திக்குரிய சாதனங்களையும் விளக்கத் தலைப்படுகின்றார். குருவையும் சிவலிங்கத்தையும் சிவனடியார்களையும் கற்றா மனம்போலக் கசிந்துருகி வழிபட்டால், பிறவித்துயர் நீங்கும். இலிங்க வழிபட்டால் ஆணவமலம் நீங்கும். குரு வழிபட்டால், மாயாமலம் கெடும். சங்கம (சிவனடியார்) வழிபட்டால் கன்மமலம் தீரும். இம் முத்திற வழிபாட்டையும் சீவன் முத்தர்களாக விளங்கிய நால்வர் பெருமக்களும், பிற சான்றோர்களுமெல்லாம் செய்து சிறப்புற்றனர். எனவே, நம்மனோர்க்கும் இவற்றைக் கடைப்பிடித் தொழுகி உய்ய முயல்வது, தலையாய பெருங் கடமையாகும்.

[பூவாளூர்ச் சைவ சித்தாந்த சபையின் சார்பில், 18-5-69 முதல் 28-5-69 வரையில், ''உண்மை விளக்கம்'' பற்றி நிகழ்த்திய சைவ சித்தாந்தச் சொற்பொழிவுகளின் சாரம்.]

—ஆசிரியர்

---

# மகாபாரதம்

அருண்மொழியரசு

திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்.

## ஏகலவ்யன் :

இவ்வாறு குருகுலம் நடந்து கொண்டிருக்கின்றபோது வேடர்கட்கு அரசனுகிய இரணிய தனசு என்பவனுடைய மகன், ஏகலவ்யன் என்பான் வந்து துரோண முனிவரைத் தொழுது தனக்கு வில்வேதங் கற்றுக் கொடுக்குமாறு வேண்டினன். ''இப்போது எனக்கு நேரமில்லை. அதிகமான மாணவர்கள் படிப்பதனுல் இடையில் உன்னைச் சேர்ப்பதற்கு அனுகூலம் இல்லை' என்ருர் துரோணர்.

ஏகலவ்யன் ''தங்களையன்றி வேறுயாரையும் அடியேன் குருநாதராகக் கொள்ளமாட்டேன். இந்த ஏழைத்தொழும்பனை ஏற்றுக் கொள்ளும்'' என்று மன்ருடி வேண்டிக் கொண்டான்.

''அப்பா! உன்னை என் சீடனுக ஏற்றுக் கொண்டேன். மனப் பூர்வமாக ஆசீர்வதிக்கின்றேன். உனக்குச் சகல கலைகளும் விளக்கமாகத் தோன்றும், நீ போய் சாதனை செய்'' என்ருர். குருபக்தியில் தலை சிறந்த அந்த ஏகலவ்யன், காட்டில் ஒரு சிலம்பக் கூடம் அமைத்து, அதில் துரோணு சாரியருடைய உருவத்தை மண்ணுல் அமைத்து, அதனையே துரோணராகப் பாவித்து, அதன் முன்னின்று வில்லைப்பிடித்து விற்பயிற்சி செய்யலானுன். அவனுடைய அளவிட முடியாத குரு பக்தி காரணமாக அங்கே அர்ச்சுனனுக்குச் சொல்லும் மந்திரம் முதலியவையும் இவனுக்கு அறிவில் தோன்றி வெகு விரைவில் தேர்ச்சி பெற்ருன். இடையருது காட்டில் வில்லைப்பிடித்துக் கணையை எடுப்பதும், வில்லில் தொடுப்பதும், குறியின்மீது விடுப்பதுமாகவே இருந்தான்.

ஒரு நாள் துரோணர் அர்ச்சுனனுக்கு ஒரு புதிய அஸ்திர வித்தையை உபதேசித்தார். ''அர்ச்சுனு! இந்த மந்திரத்தைச் சொல்லிக் கணையை விடுத்தால் ஏழுதிசைகளிலிருந்து வருவது போல் ஏழு பிரிவாகப் பிரிந்து ஒரு கொத்தாகப் பகைவனை அடிக்கும். இந்த வித்தை என் குருநாதர் அக்கினிவேய்சருக்குத் தெரியும். வேறு யாருக்கும் தெரியாது'' என்ருர். அர்ச்சுனனுக்கு இந்தப் புதிய ஒரு வித்தையைத் தெரிந்து கொண்டதற்காக மிகுந்த மகிழ்ச்சி யுண்டாகியது.

அன்றுமாலை தன் வேட்டை நாயுடன் காட்டிற்கு வேட்டையாடச் சென்ருன். அவனுடைய வேட்டை நாய் ஏகலவ்யனுடைய சிலம்பக் கூடத்திற் சென்று சிறுநீர் விட்டு அசுத்தஞ் செய்தது. அழுக்குத்துணி உடுத்திருந்த அவனைக் கண்டு கண்டு நிரம்பக் குரைத்தது. ஏகலவ்யன் வில்லில் தொடுத்து அந்தப் புதிய கணையை விடுத்தான். அது ஏழுபாணமாகப் பிரிந்து நாயின் தலையில் தைத்தது. வலி தாங்க மாட்டாதபடி நாய் குரைத்துக்கொண்டு அர்ச்சுனன் பால் வந்து வாலையசைத்தது.

அர்ச்சுனன் அந்தக்கணை காலையில் ஆசிரியர் உபதேசித்தது, என்று உணர்ந்தான். அவனுக்கு அதிசயம். உண்டாயிற்று. ''இந்த வித்தை ஒருவருக்குந் தெரியாது என்று ஆசிரியர் கூறினுரே? இந்த அற்புதமான கணையை விட்டவன் யார்?'' என்று எண்ணி நாய் சென்ற வழியே சென்ருன். அங்கே ஏகலவ்யன் நின்று வெகு வேகமாகச் சரமழை பொழிந்து கொண்டிருப்பதைக் கண்டான். அவனுடைய வில்விநோதத்தைக் கண்டு அர்ச்

சுனனுக்குச் சிறிது நாணமும் உண்டாயிற்று. காட்டிலே எரிகின்ற விளக்குப்போல், இத்தகைய வில்வீரன் ஒருவன் இருக்கின்றனே? என்று எண்ணி வியந்தான்.

விகாரவடிவுடன் கூடிய ஏகலவ்யன் சக்கர வர்த்தியின் மகனுகிய அர்ச்சுனனைக் கண்டு வணங்கினன். "பெருமானே தங்களுடைய நாய் என்பதை அறியாமல் அடித்தேன். இங்கு வந்து அசுத்தஞ் செய்து குரைத்தது. அதனுல் அடித்துவிட்டேன். மன்னிக்க வேண்டும்" என்ருன்.

அர்ச்சுனன் "அப்பா! நீ யார்? உன் பேர் யாது? இந்த அஸ்திர வித்தையை உனக்குச் சொல்லிக் கொடுத்தவர் யார்?" என்று கேட்டான்.

"ஐயனே! நான் ஏகலவ்யன் என்ற பேருள்ள வேடன். என் குருநாதர் துரோணு சாரியர். அவரிடமிருந்து இந்த வித்தையை நான் தெரிந்து கொண்டேன்" என்ருன்.

அர்ச்சுனன் "நல்லது" என்று கூறி விட்டு நகரத்திற்கு வந்தான். துரோணரைத் தொழு தான். "குருநாதா! தாங்கள் விளையாட் டுக்கும் பொய் கூறமாட்டீர்களே? காலையில் எனக்குக் கற்பித்த வித்தையைக் காட்டில் ஏகலவ்யன் என்ற வேடனுக்குக் கற்பித்துள்ளீர். ஏன் அதை என்னிடம் மறைக்க வேண்டும்?" என்று கேட்டான்.

துரோணர் ஆச்சரியமடைந்தார். "அர்ச் சுன! ஏகலவ்யனுக்குச் சொல்லவில்லையே? வா, அவனைப் போய்க் கேட்போம்" என்று கூறி அர்ச்சுனனுடன் ஏகலவ்யன் இருக்குமிடஞ் சென்ருர்.

பதுமையைக் குருநாதராக எண்ணி வணங்கும் அந்த உத்தம சீடன், நேரே குரு நாதரே வந்தால் எத்துணை மகிழ்ச்சியடைவான்? நிலை தெரியாத உவகைக் கடலில் முழுகினன். ஆடினன்; பாடினன்; ஓடினன்; பலமுறை தொழுதான்; அழுதான்; செய்வது இன்ன தென்றறியாமல் திகைத்தான்.

"குருநாதா! குருநாதா! இக்கொடி யேனைத் தேடிக்கொண்டு வரலாமா? சொல்லி யனுப்பினல் நான் உருண்டு கொண்டு ஓடி வர மாட்டேனு?" என்ருன்.

அவனுடைய அன்பின் பெருக்கினைக் கண்ட துரோணர் "அன்பனே உனக்கு ஆசிரியர் யார்? இந்தப் புதிய வித்தையை யாரிடம் எப் போது தெரிந்து கொண்டாய்?".

"குருநாதா! எனக்குத் தாங்கள்தான் குருநாதர். இதோ பாருங்கள். இந்தப் பது மையை, இதுதான் நீங்கள். இதையே தாங் களாக நினைத்து வழிபடுகின்றேன். அர்ச்சுன னுக்குக் கற்பிப்பது அனைத்தும் எனக்கு உதயமா கின்றன" என்ருன். துரோணரும் அர்ச்சுனனும் குருபக்திக்கே இவன் ஒரு எடுத்துக்காட்டாக விளங்குபவன். நிகரில்லாத குருபக்தி யுடையவன் என்பதை அறிந்து மிகவும் உள்ளம் உருகினர்கள்.

ஏகலவ்யன் "குருநாதா! இச்சிறியேன் இருக்கும் இடத்திற்குத் தங்கள் பொன்மலர்ப் பாதம்வைக்க வந்தீரே? ராஜராஜாக்கள் எல் லாம் தங்களின் வித்தையை நாடி வந்து கொண் டிருக்கின்ருர்கள். தங்கள் பெருமை எங்கே? அடியேனுடைய சிறுமை எங்கே? தங்கட்கு நான் குரு தட்சிணை தரவேண்டாவோ? எதைத் தர வேண்டும் என்று கட்டளையிடுங்கள்' என்ருன். கண்ணீரினல் உடம்பு நனைந்து நிற்கும் அவ்வேடகுமாரனைப் பார்த்து "அப் பனே! எனக்கு ஒன்றும் வேண்டாம். பொன்னும் மணியும் என்பால் குவிந்துள்ளன. நீ ஏழை. உன்பால் பெறவேண்டிய பொருள் என்ன இருக் கின்றது? நான் ஆசையை விட்டவன். நீ நன்ருக இருந்தால் போதும். அதுவே எனக்குக் குருதட்சிணை. உன் அன்பே தட்சிணை" என்ருர்.

ஏகலவ்யன் "என் கண்கண்ட கடவுளே! அப்படி சொல்லக் கூடாது. ஏதாவது ஒன்றைப் பெற்றுக் கொள்ள வேண்டும். அப்போதுதான் என் மனம் நிறைவு பெறும். நான் கடைத்தேறு வேன்" என்ருன். துரோணர் "அப்பா! உன் பால் உள்ள பொருள்களில் எது உயர்வு என்று உனக்குத் தோன்றுகின்றதோ அது எனக்குக் குருதட்சிணையாகட்டும்" என்ருர்.

ஏகலவ்யன், "என்பால் உள்ள பொருள்ளில் உயர்வாக நான் நினைப்பது விற்பயிற்சிக்கு உதவும் இந்த வலக்கைப் பெருவிரல்தான் என்று எண்ணி, வாளை எடுத்து அந்த விரலைப் பளிச் சென்று வெட்டி வெற்றிலைப் பாக்குடன் சேர்த்து ஆச்சாரியர் காலின் மீது வைத்து வணங்கினன். விற்பயிற்சிக்கே முக்கியமான ஒரு உறுப்பைக் கொய்ததைப் பார்த்துத் துரோணரும், அர்ச்சுனனும் திடுக்கிட்டார்கள். அவர்கள் கண்களில் நீர் துளித்தது. சொல் தழுதழுத்தது. துரோணர் அவனைத் தழுவி "குழந்தாய்! உன் குருபக்தியால் உன் புகழ் என்றும் குன்ருது நின்று நிலவுமாக. வாழி" என்று வாழ்த்தி விட்டுச் சென்ருர். பின்னர் ஏகலவ்யன் மற்ற விரல்களால் பாணங்களை விட்டுப் பழகினன். ஆனுல் முன்னிருந்த வேகம் அமையல்லை.

## குறி எய்தல் :

இவ்வாறு மாணவர்கள் நன்கு பயிற்சி பெறுகின்ற காலை, ஒரு நாள் துரோணர் குறிதவருமல் எய்யும் வகையைச் சோதிக்க எண்ணினர்.

கள்ளிக்காக்கையைப் போன்ற ஒரு பதுமையைக் கட்டையில் செய்வித்தார். ஒரு மரத்தின் நுனியில் அதை வைத்துக் கட்டச் செய்தார். எல்லாப் பிள்ளைகளையும் அழைத்துக் கொண்டு அங்கே சென்ருர்.

"மாணவர்களே! இங்கே பாருங்கள். இந்த மரத்தில் கட்டி இருக்குங் கள்ளிக் காக்கையின் தலையைக் குறிதவருமல் எய்து ஒரே பாணத்தினுல் தள்ளவேண்டும். அவ்வாறு குறியடித்தவன் சமர்த்தன். எல்லோரும் வரிசையாக நில்லுங்கள். வில்லில் கணையைத் தொடுத்துக் கொண்டு குறியை உற்றுப் பாருங்கள். நான் கட்டளையிட்டவுடன் அம்புவிட்டுக் குறியை அடிக்க வேண்டும் என்ருர். எல்லோரும் அதுபடியே வரிசையாக நின்று வில்லை வளைத்து அம்பைத்தொடுத்துப் பாசபட்சி (கள்ளிக் காக்கை) யைப் பார்த்து நின்ருர்கள்.

துரோணர் முதலில் யுதிஷ்டிரரைப் பார்த்து "விரனே! கள்ளிக் காக்கை தெரிகின்றதா?"

"தெரிகின்றது".

"கள்ளிக்காக்கையைக் கட்டியிருக்கும் கிளை தெரிகின்றதா?"

"தெரிகின்றது".

"நல்லது; மரம் தெரிகின்றதா?"

"தெரிகின்றது."

"தருமா! உன்னுல் இந்த இலட்சியத்தை அடிக்க முடியாது. வில்லைக் கீழே வைத்து விட்டுப்போ" என்ருர் துரோணர். இதுபடியே பீமன், நகுலன், சகாதேவன் எல்லோம் கூறினர்கள்.

"துரியோதன! நீ காக்கையைப் பார்க்கின்ருயா!"

"ஆம் பார்க்கின்றேன்".

"கிளையும் மரமும் தெரிகின்றதா?"

"தெரிகின்றது".

"நான் தெரிகின்றேன?"

"சுவாமி! எனக்கென்ன கண் குருடா? பட்டப்பகலில் தங்களைத் தெரியாமல் இருக்குமா? நன்ருகத் தெரிகின்றீர்".

"உன் உடன் பிறந்தார்கள் தெரிகின்ருர்களா?"

"உடன் பிறந்தார் எல்லோரும் தெரிகின்ருர்கள்".

"மூடனே! வில்லை வைத்துவிட்டுப் போ' என்ருர் ஆச்சாரியர்.

"இப்படியே அசுவத்தாமன், கர்ணன் ஆகிய மாணவர்கள் அனைவரும் கூறினர்கள்.

துரியோதனன் "தம்பியர்களே! துரோணருக்கு என்ன பித்துப் பிடித்து விட்டதா? தெரியாது என்ருல் தானே குற்றம்? தெரிகின்றது என்ருல் அது சிறப்புத்தானே? இவர் என்ன நம்மை இகழ்கின்ருர்?" என்று மெல்லப் பேசிக் கொண்டான். துரோணர் முடிவில் அர்ச்சுனனைப் பார்த்து, "அர்ச்சுன! காக்கை தெரிகின்றதா?" என்ருர்.

"தெரிகின்றது"

"கிளை தெரிகின்றதா?"

"இல்லை".

"மரம் தெரிகின்றதா!"

"இல்லை".

"நான் தெரிகின்றேனா?"

"இல்லை"

"உனக்கென்ன கண்பார்வை குறைந்து விட்டதா? உன் சகோதரர்கள் தெரிகின்றார்களா?"

"குருநாதா! பறவையைத் தவிர வேறு தெரியவில்லை. பட்சியைக் குறிவைத்துநிற்கின்ற எனக்கு மரமும் நீங்களும் எப்படித் தெரியமுடியும்? பட்சி ஒன்றே தெரிகின்றது".

சிறிது நேரம் மௌனம்.

"அர்ச்சுனா! இப்போது பாசபட்சியான காக்கை தெரிகின்றதா?"

"எனக்கு இப்போது காக்கை கூடத் தெரியவில்லை"

"என்ன தான் தெரிகின்றது?"

பறவையின் சிரம்மட்டும் தெரிகின்றது.

சிறிது நேரம் மௌனம்.

"இப்போது பறவையின் தலை தெரிகின்றதா?

"இல்லை"

"ஆ! தலைகூடத் தெரியவில்லையா? வேறு என்னதான் தெரிகின்றது?"

"கழுத்து ஒன்றுமட்டுந் தெரிகின்றது".

துரோணருக்கு அச்சொல்லைக் கேட்டவுடன் மயிர்ச்சிலிர்ப்பு உண்டாயிற்று. "விடு" என்றார். கணையை விட்டான் விஜயன். பட்சியின் தலை விழுந்தது.

"துரியோதனா! மற்ற மாணவர்களே! குறிவைத்து நிற்கச் சொன்னேன். குறியைப் பார்க்கின்ற நீங்கள், மரத்தையும் பார்த்து, கிளையையும் பார்த்து என்னையும் பார்த்தால் யார் மீது கணை விடுவது? குறி பார்க்கிறவனுக்கு பிறபொருள் தெரியக்கூடாது அன்றோ? எல்லாந் தெரிந்தால் குறி நிலைக்குமோ?" என்று கேட்டார். எல்லோருந் தலை குனிந்து நின்றார்கள்.

## முதலை :

ஒருநாள் காலையில் மாணவர்களுடன் துரோணாசாரியார் நீராடும் பொருட்டுக் கங்கா நதிக்குச் சென்றார். மாணவர்கள் ஒரு புறத்தில் குதித்தும் நீந்தியும் ஆடியும் பாடியும் நீரில் முழுகினார்கள்.

துரோணர் ஒருபுறம் தனியேநீரில் முழுகினார். ஒரு முதலை அவருடைய காலைப் பற்றிக் கொண்டது. நீருக்குள் முதலைக்கு உரிமையதிகம். அதனைக் கொன்று தன்னை விடுவித்துக் கொள்ளும் ஆற்றல் இருந்தும் அவர் "மாணவர்களே! மாணவர்களே! என்னைக் காப்பாற்றுங்கள்! என்று கதறி அழைத்தார். கர்ணன் தருமர் துரியோதனன் முதலிய எல்லோரும் ஓடிவந்து செய்வது இன்னதென்று தெரியாமல் இப்படியும் அப்படியும் ஓடினார்கள். சிலர் சிறு கல்துண்டுகளை எடுத்து நீருக்குள் எறிந்தார்கள்.

அர்ச்சுனன் முதலையால் கவரப்பட்ட கஜேந்திரன் முன் கருடப் பறவை மீது திருமால் காட்சி தந்தது போல் வந்து, ஐந்து பாணங்களால் அந்த முதலையைக் கொன்று துரோணருக்கு உயிர்ப் பிச்சையளித்தான். துரோணர் உய்வு பெற்று உவகையுற்றார்.

## வேறு பரிட்சை :

துரோணர் மண்ணால் ஒரு குழந்தை போன்ற உருவத்தைச் செய்து எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே கங்கையில் இட்டார். மாணவர்களின் கண்களைக் கட்டிவிட்டு "இப்போது நீரில் உ.ள்ள குழந்தைப்பதுமையை அடித்துத் தலையை மட்டும் வேருக்குங்கள்" என்றார். எல்லோரும் மயங்கி அதைச் செய்ய முடியாமல் நின்றார்கள். அர்ச்சுனன் மட்டுங் கண்ணைக் கட்டியும், கறங்குபோல் சுழற்றிவிட்டும், திசை மயக்கமும் குறிமயக்கமும் இன்றி நீருக்குள் இருக்கும் பதுமையின் தலையைத் தள்ளினான். இந்த ஆச்சரியத்தைக் கண்டு எல்லோரும் அவனைக் கொண்டாடினார்கள். இவனே துருபதனை வெல்வான் என்று துரோணர் மகிழ்ந்தார்.

அர்ச்சுனனை அழைத்துத் தழுவி "என் அருமை மகனே! இந்தா! இந்த "பிரமசிரஸ்" என்ற ஆயுதம். இது உயிருக்கு உறுதுணையாக இருக்கட்டும். இதை எக்காலத்திலும் மனிதர்கள் மீது விடாதே. தேவர்கள் முதலிய பகைவர் எவராயினும் இது அழிக்கும். இந்த உலகை ஒரு நொடியில் இக்கணைசாம்பலாக்கி விடும். உன் உயிருக்கு இறுதி வருமாயின் அப்போது இதை விடு. சாதாரணமான போரில் இது விடக் கூடியதன்று" என்று கூறித்தந்தார். அதை விடுகின்ற மந்திரம், திருப்பி யழைக்கின்ற மந்திரம் முதலிய எல்லாவற்றையும் உபதேசித்தார். "அர்ச்சுனா! உலகத்தில் உன்னைப்போன்ற வில்லாளி மற்றொருவன் இரான்" என்றார்.

(தொடரும்)

# விநாயகர் பெருமை



முன்னுரை :

இந்து மதத்திற்குரிய கடவுளர் பலருள் விநாயகர் மிக்க முதன்மையும் சிறப்பும் உடைய வராகத் திகழ்கின்ருர். இந்துமதத்தைச் சேர்ந்த அன்பர்கள் எந்தச் செயலைத் தொடங்குவதாக இருந்தாலும், விநாயகரையே முதலில் வணங்கித் தொடங்கும் வழக்கம் உடையவராக உள்ளனர். 'முன்னவனே யானை முகத்தவனே' என இராம லிங்க அடிகள் குறிப்பிடுதல் காணலாம். திருவள்ளுவர் தமது திருக்குறளின் முதற்குறளில் 'ஆதிபகவன்' எனச் சுட்டியது, முதலில் தொழப் பெறும் கடவுளாகிய விநாயகரையே குறிப்பதாகவும் கொள்ள இடமுண்டு.

தொன்மையும் முதன்மையும் :

மக்கள் முதன் முதலில் தோன்றிய இடம் மலையும் மலையைச் சார்ந்த நிலமுமாகிய குறிஞ்சித் திணையே என்பர் ஆராய்ச்சியாளர். யானை குறிஞ்சி நிலத்திற்குரிய விலங்காதலின், முதன் முதல் தோன்றிய மனித குலத்தினர், முதன் முதலில் யானை முகமுடைய விநாயகரையே தொழத்தொடங்கினர் போலும். விலங்குகளுள் யாவது ஏனைய எல்லாவற்றிலும் பெரியதாதல் யானை போல, யானை முகமுடைய விநாயகர் ஏனைய எல்லாக் கடவுளரிலும் மிக்க சிறப்பும் முதன்மையும்உடையவர் என்பது புலனுகின்றது.

'ஓசை ஒலியெல்லாம் ஆனுய் நீயே' என்றபடி, எல்லா ஓசை ஒலிகளுக்கும் மூலமுதலாகத் திகழ்வது பிரணவம் என்னும் ஓங்காரமேயாகும். அம்மூல முதல் ஒலியினின்றே எல்லாப் பொருள் களும் உலகங்களும் தோன்றுவவாயின என்பர் ஞானிகள். நம் உடலின் அமைப்பும், நம் முடைய காது இருதயம் இரைப்பை கருப்பை முதலிய உறுப்புக்களும் பிறவும், ஓங்கார வடிவினவாகவே இருத்தல் காணலாம். சங்கு முதலிய இயற்கைப் பொருள்களும் அவ்வடிவினவாகவே காணப்படுகின்றன. இவ்வாற்ருல், உலகத்தின் தோற்றமும் இயக்கமும் ஓங்காரத்தினுலேயே நடைபெறுகின்றன என்பதனை, ஞானிகள் நன்கு கண்டுணர்ந்தனர். தாம்கண்ட இவ்வுயரிய உண்மையினை, எளிய பாமரமக்கள் எல்லோரும் கூட உணர்ந்து உய்யும் பொருட்டு, முழுமுதற் பரம்பொருளை அவ்வோங்காரவடிவினதாக, இயற்கையில் அமைந்து தோன்றும் யானைமுகம் கொண்டுள்ளதாகவே, ஞானிகள் உருவகம் செய்துகாட்டி உணர்த்து வாராயினர் எனலாம்.

பிறநாடுகளில் :

யானை முகமுடைய விநாயகப் பெருமான், இந்து மதத்தில் மட்டுமேயன்றி, சமணம் பௌத்தம் ஆகிய மதங்களிலும் சிறப்பாகப் போற்றி வழிபடப் பெறுகின்ருர். இவரது வழிபாடு, நமது இந்திய நாட்டில் மட்டுமேயன்றி, நேபாளம்

(நங்கை நல்லூர் ஸ்ரீ வரசித்தி விநாயகர் கோயிலில், 'கணேஷ் மண்டலி'யின் நைமிசாரணிய மண்டபத்தில், வித்துவான் **ஸ்ரீ லஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான்** சுவாமிகள் அவர்களின் தலைமையில், தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தின் மாதாந்தர வழிபாட்டுக் கூட்டத்தில், ஆற்றிய சொற் பொழிவினைத் தழுவியது (28—9—69)

—ஆசிரியர்

திபெத்து, பர்மா, சயாம், இந்தோசீனு, சீனு, ஜாவா, பாலி, போர்னியோ, ஜப்பான், கொரியா முதலிய நாடுகளிலும், சிறப்புற நிகழ்கின்றது. சமன்லால் என்னும் ஆசிரியர், இந்துஅமெரிக்கா என்னும் தமது நூலில், அமெரிக்கா நாட்டில் பெரு, மெக்சிகோ, முதலிய பகுதிகளிலும், விநாயகர் வழிபாடு இருந்தமைக்குரிய சான்றுகள் பல காணப்படுகின்றன என்று குறிப்பிடுகின்ருர். ஜப்பானிய மக்கள் விநாயகரை 'Kon—Kitten' என வழங்குகின்றனர். சைனுவில் பாறையில் அமைக்கப் பெற்ற 'King—Hsein' (கி. பி. 531) என்னும் கோயிலில், விநாயகர் திருவுருவம் காணப் படுகின்றது. கி. மு. 2—ஆம் நூற்ருண்டைச் சேர்ந்தனவாகக் கருதப்பெறும் அமராவதிச் சிற்பங்களுள் விநாயகர் திருவுருவம் காணப்படுகின்றது என்று பர்ஜெஸ் என்னும் அறிஞர் கூறுகின்ருர். ஆப்கானிஸ்தானத்தில் மிகப் பழமை வாய்ந்த விநாயகர் திருவுருவங்கள் இரண்டு, தொல் பொருள் ஆராய்ச்சி அறிஞர்களால் அண்மையில் கண்டு பிடிக்கப்பெற்றுள்ளன. நேபாளத்தில் பஞ்சமுக விநாயகர் மிகுதியாகப் போற்றப் படுகின்ருர். ஜாவாத்தீவில் பழங்காலத்தில் சைவம் வைணவம் பௌத்தம் ஆகிய சமயங்கள் மிகுதியாகப் பரவியிருந்தன. கி. பி. 13-ஆம் நூற்ருண்டு முதல் இஸ்லாமிய சமயமே பெரிதும் தலையெடுத்தோங்கியது. எனினும் இன்னும் அங்கே, விநாயகரின் செல்வாக்கு மக்களிடையிற் சிறிதும் குன்ருமல் நிலவி வருகின்றது.

ஜேனஸ் (Janus) என்னும் உரோமக் கடவுளுக்கும், நமது துவிமுக கணபதி வடிவத்திற்கும், நெருங்கிய ஒற்றுமை காணப்படுகிறது. நமது கூத்தாடும் விநாயகருக்கும், நடனமாடுகின்ற தயோனிசஸ் (Dionysus) என்னும் அயோனியக் கடவுளுக்கும் இடையே, பல ஒப்புமைகள் காணப்படுகின்றன. நம் இந்திய நாட்டோடு உரோமரும் யவனரும் மிகப் பழங்காலத்திலேயே வாணிகத் தொடர்புகள் கொண்டிருந்தனர் என்பது வரலாற்று நூல்களில் புலனுவதின், நம்முடைய விநாயகர் வழிபாடு அங்கெல்லாமும் பரவியிருந்தது எனவும் நாம் கொள்ளுதல் கூடும்.

### தத்துவ நுட்பம் :

விநாயகரின் திருவுருவம், எத்தனையோ பல தத்துவ நுட்பங்களை உணர்த்திக் கொண்டிருக்கின்றது. விநாயகரின் திருவுருவத்தில் நாபி பிரமனையும், முகம் திருமாலையும், முக்கண் சிவபிரானையும், இடப்பக்கம் சக்தியையும், வலப்பக்கம் சூரியனையும் குறிப்பதாகப் பெரியோர் கூறுவர். விநாயகரின் ஐந்து திருக்கைகளில் உள்ள பொருள்களுள், பாசம் படைத்தலையும், அங்குசம் அழித்தலையும், ஒற்றைக் கொம்பு காத்தலையும், துதிக்கை மறைத்தலையும், மோதகம் அருளலையும், உணர்த்துவதாக நூல்கள் நுவலும். விநாயகர் விலங்குத்தலையும் மனித உடலும், தேவர்க்குரிய பாதங்களும் பெற்றுத் திகழ்கின்ருர். ஆணும் பெண்ணுமாக அமைந்து திகழ்வது உலகம் என்பதனைச் சுட்டும் முறையில் ஒடிந்த தந்தத்தையுடைய இடப் பகுதி பெண்கூருகவும், வலப் பகுதி ஆண்கூருகவும் கொண்டு, விநாயகர் விளங்குகின்ருர். விநாயகர் அறுவடைக்குரிய கடவுள் என்றும், அதுபற்றியே அறுவடைப்பயனை அழிக்கும் பெருச்சாளியை அடக்கி ஊர்தியாகக் கொண்டுள்ளார் என்றும் கூறுவர். இங்ஙனம் முரண்பாடுகள் பலவற்றையும் ஒருங்கியைத்துக் கொண்டுள்ள விநாயகரின் வடிவம், அத்துவைத சித்தாந்த தத்துவ நுட்பத்தினைக் காட்டிக் கொண்டிருக்கிறது என்று 18-ஆம் நூற்ருண்டில் வாழ்ந்திருந்த நல்ல கவி என்னும் அத்துவைத தத்துவாசாரியர் பாடியுள்ளார்.

### நூல்கள் :

விநாயகர் வழிபாடு கி. பி. 6 அல்லது 7-ஆம் நூற்ருண்டிற்குப் பின்னரே தமிழ் நாட்டிற் பரவத் தலைப்பட்டது என ஆராய்ச்சியாளர்கள் கூறுவதுண்டு. எனினும், கி. மு. 1500 ஆண்டுகட்கும் மிக முற்பட்டது எனக் கருதப் பெறும் இருக்குவேதத்தின் மூன்றும் மண்டிலத்தில் 'கணநாம் த்வா கணபதிம்' எனத் தொடங்கும் 23—ஆம் செய்யுளில் கணபதியாகிய விநாயகரைப் பற்றிய குறிப்பு அமைந்திருக்கின்றது. இதில் 'கண—கணபதி—கவி-ஜேஷ்ட—பிராமணஸ்பதி' எனவரும் சொற்கள் விநாயகரையே குறிப்பனவாகக் கொள்ளலாம். கணேசபுராணம், முற்கலபுராணம், பவிஷ்ய புராணம், விஷ்ணுதர்மோத்தர புராணம், பிரம்மவைவர்த்த புராணம், கருடபுராணம், அக்கினிபுராணம், கணபதி உபநிஷத், கணேச கீதை முதலிய பலநூல்கள் விநாயகரின் பெருமையை விளக்குகின்றன. ஆதிசங்கரர் கணேசபுஜங்கம், கணேசபஞ்ச ரத்தினம் ஆகிய நூல்களை அருளிச் செய்துள்ளார். கணகர், முற்கலர், பார்க்கவர், மதங்கர், வியாசர் முதலிய முனிவர்கள் விநாயகரை வழிபட்டு

அருள் பெற்றுள்ளனர். திருஞான சம்பந்தர், நம்பியாண்டார் நம்பிகள், கபிலதேவர், அதிரா அடிகள், மெய்கண்டார், ஔவையார், கச்சியப்பமுனிவர் முதலிய தமிழ்ச் சான்றோர்கள் பலர், விநாயகரைத் துதித்து வழிபட்டுள்ளனர். கச்சியப்ப முனிவர் தமிழிற் பாடியுள்ள விநாயக புராணம் பெரும் புகழ்பெற்ற தொன்றாகும்.

### திருவுருவங்கள் :

விநாயகரின் திருவுருவை, வெவ்வேறு வகைகளில் வெவ்வேறு நிலைகளில், சிற்பநூல்கள் சிறப்புற அமைத்து விளக்கியுள்ளன. சிற்ப நூல்களில் பின்வருமாறு விநாயகரின் 32 திருவுருவங்கள் குறிப்பிடப்பெற்றிருக்கின்றன. அவை யாவன :

(1) பால கணபதி (2) தருண கணபதி (3) பக்த கணபதி (4) வீர கணபதி (5) சக்தி கணபதி (6) துவஜ கணபதி (7) சித்தி (பிங்கல) கணபதி (8) உச்சிஷ்ட கணபதி (9) விக்கினராஜ கணபதி (10) க்ஷிப்பிர கணபதி (11) ஏரம்ப கணபதி (12) லட்சுமி கணபதி (13) மகா கணபதி (14) விஜய (புவனேச) கணபதி (15) நிருத்த கணபதி (16) ஊர்த்துவ கணபதி (17) ஏகாட்சர கணபதி (18) வரகணபதி (19) திரியட்சர கணபதி (20) க்ஷிப்ரப்பிரசாத கணபதி (21) அரித்திர கணபதி (22) ஏகதந்த கணபதி (23) சிருஷ்டி கணபதி (24) உத்தண்ட கணபதி (25) ரிணமொச்சக கணபதி (26) துண்டி கணபதி (27) துவிமுக கணபதி (28) திரிமுக கணபதி (29) சிம்ம கணபதி (30) யோக கணபதி (31) துர்க்கா கணபதி (32) சங்கடஹர கணபதி.

இம் முப்பத்திரண்டு கணபதிகளுள், முதற்கண் உள்ள 16 கணபதிகளின் திருவுருவங்களும், காஞ்சிகாமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரசுவதி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற, இராமேசுவரம் சங்கர மண்டபத்தில், மிக அழகிய முறையில் எழுந்தருளச் செய்யப் பெற்றுள்ளமை, அன்பர்கள் அனைவரும் கண்டு களிக்கத்தக்கது.

### அற்புதச் சிற்பங்கள் :

இங்ஙனமே, விநாயகரின் அற்புதமான அழகிய சிற்பத் திருவுருவங்கள் பற்பல இடங்களிற் காணப் பெறுகின்றன. அவைகளைப் பற்றிய சிறு குறிப்புக்கள் வருமாறு :—

(1) நேப்பாளத்திலும், இந்தோசைனாவிலும், நான்கு முகங்களை உடைய விநாயகர் திருவுருவங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

(2) பிரிட்டிஷ் பொருட்காட்சிச் சாலையில், ஐந்து முகங்களுடனும் பத்து கரங்களுடனும், 'மகாராஜ லீலாசனம்' என்னும் நிலையில், தாமரை மலரை ஏந்திய இடக்கையை உடைய வல்லபை என்னும் சக்தியைத், தமது இடப்பக்கத்தொடையில் அமரச் செய்து தழுவிக் கொண்டு உள்ள, ஏரம்ப கணபதியின் திருவுருவம் காணப்படுகின்றது.

(3) சுசீந்திரம் தாணுமாலயப் பெருமான் கோயிலில், அம்மையின் சந்நிதிக்கு எதிரே, விநாயகரின் பெண்மைத் திருவுருவம் (கணேசானி) உள்ளது. ஒரு காலை மடித்து மற்றொரு காலைத் தரையில் ஊன்றிக்கொண்டு, சுகாசன நிலையில், பாசம் அங்குசம் ஏந்தி, அபய வரத முத்திரைகளுடன், நான்கு கரங்கள் உடையதாக அத்திருவுருவம் விளங்குகின்றது.

(4) ஜபல்பூருக்கு அருகே, பேரேகாட் என்னும் இடத்திலும், இத்தகைய கணேசானியின் திருவுருவம் காணப்படுகின்றது.

(5) மதுரைக் கோயிலில், துவாரபாலகருக்கு அருகே கம்பத்தடிமண்டபத்தில், வியாக்கிரபாதகணேசானி என்னும் திருவுருவம், இரண்டுகைகளுடன், ஒரு கையில் தாமரை ஏந்திக் கொண்டு, மற்றொரு கையை மீனாட்சியம்மை போல் தொங்க விட்டுக் கொண்டு உள்ளது.

(6) வேலூர்க் கோட்டையில், சிற்பக் கலை நலம் செறிந்த திருக்கல்யாணமண்டபத்தில், நவநீத கிருஷ்ணரைப் போல அழகிய குழந்தை வடிவத்தில் விநாயகர் விளங்குகின்றார்.

(7) விநாயகருக்கு மூஷிகம் என்னும் பெருச்சாளியே வாகனம் ஆயினும், அவருக்கு சிங்கமும் வாகனமாகச் சில இடங்களில் காணப்படுகின்றது. சிங்கத்தின் மீது அமர்ந்துகொண்டு ஐந்து தலைகளுடன் கூடிய பஞ்சமுக விநாயகர் திருவொற்றியூர்த் தியாகேசுவரர் கோயிலிலும், நாகப்பட்டினம் காயாரோகணேசுவரர் கோயிலிலும், எழுந்தருளியுள்ளார். திருவொற்றியூரில் ஐந்து தலைகளும் ஒரே வரிசையில் உள்ளன. நாகப்பட்டினத்தில் நான்கு திசைகளிலும் நான்கு தலைகளும், மேலே ஒருதலையும் உள்ளது.



பஞ்சமுக சிம்ம வாகன
விநாயகர்
நாகப்பட்டினம்

(8) மதுரை, திருச்செந்தூர். சிதம்பரம். குமரகோட்டம் முதலிய தலங்களில், முக்குறுணி விநாயகர் மிகப் பெரிய திருவுருவம் கொண்டு விளங்குகின்ருர். இவருக்கு முக்குறுணி அரிசியில் மோதகம் செய்து படைக்கப்படுகிறது.

(9) தஞ்சை மாவட்டம் திருநள்ளாற்றில், சாளிக்கிராமம் என்னும் சிலேவடிவத்தில் விநாயகர் பூசிக்கப் பெறுகின்ருர்.

(10) மைசூர்மாநிலத்தில் அளபீட் (துவார சமுத்திரம்) என்னும் இடத்தில், ஒய்சளேசுவரர் கோயிலில் உள்ள, மிகச் சிறந்த வேலேப்பாடு உடைய நிருத்தன விநாயகர் திருவுருவம் கண்டு மகிழத்தக்கது.

(11) விநாயகர் திருவுருவங்களில், பொதுவாகப் பெரும்பாலும் துதிக்கையானது இடப்புறமாகவே இருக்கும். ஆனல் சுவாமிமலே என்னும் முருகன் தலத்திற்கு அருகேயுள்ள, திருவலஞ்சுழி என்னும் தேவாரப்பாடல்பெற்ற தலத்தில், வலப்புறமாகச் சுழிந்துள்ள தும்பிக்கையுடன் கூடிய, வலம்புரி விநாயகர் திருவுருவம் மிகச்சிறப்பான முறையில் அமைந்திருக்கின்றது. சிற்பவேலேப்பாடுகளிலேயே மிகவும் கடினமானதாகப் புகழோங்கி உள்ள, திருவலஞ்சுழிப் பலகணியின் சிற்பத்திறனும், நாம் கண்டு களிதுளும்பற்பாலது.

(12) மைசூர் மாநிலத்தில் உள்ள நஞ்சன் கூடு என்னும் இடத்தில், உச்சிஷ்ட (சக்தி) கணபதி என்னும் திருவுருவம் மிக்க சிறப்பான தொன்று. 'மந்திர மகார்ணவம்' என்னும் முறையில் இத்திருவுருவம் அமைக்கப் பெற்றுள்ளது.

(13) விநாயகப் பெருமான், பொதுவாகக் கோயில்களில் பெரும்பாலும் திருச்சுற்றுலேகளின் முகப்பிலேயே, இடம்பெற்றிருப்பது வழக்கம். ஆனல் இராமநாதபுரம் மாவட்டத்தில், காரைக்குடியினின்று திருப்புத்தூருக்குச் செல்லும் வழியில், குன்றக்குடிக்கு அருகே பிள்ளேயார் பட்டி என்னும் தலத்தில் உள்ள, பிள்ளேயார் பட்டிக் கோயிலில், கருவறையிலேயே விநாயகர் மூலவராக எழுந்தருளியுள்ளார். வேறு எங்கும் இல்லாத முறையில், அவர் அங்கு இரண்டு திருக்கைகளுடன் மட்டும் காணப்படுகின்ருர். விநாயகருக்குத் தமிழ்நாட்டில் முதன் முதலாக எடுக்கப் பெற்ற கோயில்களுள், இதுவே மிகப் பழமையான கோயில் என்பது அறிதற்குரியது.

(14) ஆந்திர மாநிலத்தில் திருப்பருப்பதம் என்னும் தேவாரப் பாடல் பெற்ற ஸ்ரீ சயிலத்தில், விநாயகரின் அழகிய திருவுருவம் கண்ணபிரானேப் போல வேய்ங்குழல் ஊதும் நிலேயில், அமைந்து திகழ்கின்றது. தமிழ்நாட்டிற் சில இடங்களில் வீணே ஏந்திய விநாயகரின் திருவுருவம் காணப்படுகின்றது.

(15) மகாராட்டிர மாநிலத்தில், பாலகங்காதர திலகர் என்னும் தேசியப் பெருந்தலேவர், தேசப்பற்றை ஊட்டி மிகவும் வளர்க்கும் முறையில் விநாயக சதுர்த்தி விழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாடுதற்குப் பெரிதும் ஊக்கம் அளித்தார். அம்மாநிலத்தில் மார்க்கோவான் என்னும் இடத்திலும், அதைச் சுற்றிலும், விநாயகருக்கென்று பல புகழ் பெற்ற கோயில்கள்

அமைந்துள்ளன. அக்கோயில்களில் முறையே மயூரேசர், சிந்தாமணி விநாயகர், விக்கினேசுவரர், விநாயகர், வல்லாளேசுவரர், கணபதி, கிரிஜத்மகர், சித்திவிநாயகர் என்னும் அஷ்ட விநாயகர்கள், கோயில் கொண்டுள்ளனர். தமிழ்நாட்டில் திருச்சிராப்பள்ளிக் குன்றின் மேல் உள்ள உச்சிப்பிள்ளையார் கோயிலும் மிக்க புகழ் வாய்ந்தது.

(16) காஞ்சிபுரத்தில், திருவோணகாந்தன் தளி என்னும் தேவாரப் பாடல் பெற்ற கோயிலில், கருவறை மண்டபத்தினது நுழைவாயிற் சுவரின் முகப்பில் விநாயகர் திருவுருவம் ஒன்று உள்ளது. அவர் தம் அருகே சென்று, நம் செவியை அணுக வைத்து நிற்பின், ஒரு வகை ஓங்கார ஒலி ஒலித்துக் கொண்டிருப்பதைக் கேட்கலாம். இத் திருவுருவை அமைத்த சிற்பக் கலைஞர் யாரோ? சிலையில் அமைந்த திருவுருவில், எங்ஙனம் இவ்வகை ஒலி எழுகின்றது என்பது வியப்பாக உள்ளது! எத்தனையோ நெடுங்காலமாக, எத்தனையோ பல்லாயிரக் கணக்கான மக்கள், இவ்வொலியைக் கேட்டு, மகிழ்ந்து வியந்து வணங்கிச் செல்கின்றனர்!




வல்லப கணபதி

முடிவுரை :

விநாயகப் பெருமானைப் பெரும் பாலும் திருமணம் ஆகாத பிரம்மசாரி நிலையினராகவே, பொதுமக்கள் கருதுவர். எனினும் விநாயகருக்கு வல்லபை என்னும் சக்தியை மனைவியாக நூல்கள் குறிப்பிடும். வல்லபையோடு கூடிய கணபதிக்கு வல்லபகணபதி என்பது பெயர். இவர்பத்துக்கைகள் உடையவராகவிளங்குவார். இப்பத்துக்கைகளிலும் முறையே திருமகள் பார்வதி இரதி நிலமகள் ஆகியோருக்கு உரிய தாமரை பாசம் உற்பலம் நெற்கதிர் ஆகியவை களையும்; திருமால் சிவபிரான் மன்மதன் வராகன் ஆகியோருக்கு முறையே உரிய சக்கரம் சூலம் வில் கதாயுதம் என்பனவற்றையும், ஒற்றைத் தந்தம் மாதுளம்பழம் ஆகியவற்றையும் ஏந்திக் கொண்டிருப்பர். இவ்வல்லப கணபதியை வழிபடுவோர் எல்லா வல்லமைகளையும் பெறுவர். நினைத்த செயல்களையெல்லாம் இனிது நிறைவேற்றி முடிப்பர். இராமலிங்க அடிகளார் 'வல்லப கணேசர்' 'சித்தி விநாயகர்' பற்றிப் புகழ்ந்து, சிறந்த சில திருப்பதிங்களைத் தமது திருவருட்பாவில் அருளிச் செய்துள்ளார்.

ஞானத் தெய்வமாகிய விநாயகர், சித்தி புத்தி என்னும் இருமனைவியரை மணந்து கொண்டு, க்ஷேமம் லாபம் என்னும் இரு புதல்வர்களைப் பெற்றெடுத்துள்ளனர் என்பர் பெரியோர். விநாயகரை வழிபடுபவர்களுக்கு நினைத்தது கைகூடும்; அறிவாற்றல் ஓங்கும்: இன்ப வாழ்வும் நற்பேறுகளும் ஏற்படும் என்பது இதன் கருத்து. எனவே இத்தகைய பல சிறப்புக்களையுடைய விநாயகப் பெருமானை நாம் அன்புடன் வணங்கினால், நமக்கு "வாக்குண்டாம்; நல்ல மனமுண்டாம்; மாமலராள் நோக்குண்டாம்; மேனி நுடங்காது'' ஆதலின், விநாயகரை நாம் அன்புடன் பணிந்து வழிபட்டு, நலம்பலவும் பெற்று உய்வோமாக!



# நம்மாழ்வார்

பிரபந்த வித்வான்
ஸ்ரீமத் கே. வேங்கடராமாநுஜ சுவாமிகள், சென்னை

திருமகள் கேள்வனுகிய பரம் பொருளுக்கு எல்லாவுயிர்களும் சரீரப் பொருளாய்க் கொண்டு அடிமைப்பட்டவை. அவனுக்கு வசமாய் நிற்பவை; அவனுடைய திருவருளாலே அவனை அடையக் கூடியவை; அவனைப் பெற்று வாழ்தலே மோட்ச இன்பம் என்பன ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தில் உள்ள முக்கியமான தத்துவப் பொருள்கள். இவற்றை நன்கு அறிந்து உலகத்திற்கு வெளியிட்டவர்களில் ஆழ்வார்கள் மிக முதன்மை வாய்ந்தவர்கள் ஆவர். அவர்களுக்கு நம்மாழ்வார் நடுநாயகமாக விளங்குகின்ருர். சிறந்த இரத்தின மாலையின் நடுவில் உள்ள நாயக இரத்தினம் போன்று, ஆழ்வார்கள் நடுவில் நம்மாழ்வாரும் அவர்களுக்கெல்லாம் பெருமையை விளைத்துக் கொண்டு விளங்குகிருர் எனலாம்.

தவிர, ஆசாரிய கோஷ்டியிலும் இவர் முதல்வராவர். ஸ்ரீமந்நாதமுனிகள் என்னும் ஆசாரிய முதல்வருக்கு, ஆதியில் உபதேசம் செய்தவர் நம்மாழ்வார். அது பற்றி, 'ஆதிகுருவாய்ப் புவியில் அவதரித்தோன் வாழியே' என இவரை வாழ்த்தலாயினர். இவர் ஸ்ரீமந்நாதமுனிகளுக்குப் பிரத்யட்சமாகி, அவரை அநுக்ரகித்து, அவருக்கு இரகசியங்களையும் நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தையும் உபதேசம் செய்தனர் என்பது உலகறிந்த விஷயம். இவரது பெருமையைப் பற்றி ஒரு சில விஷயங்களை ஈண்டு விளக்கலாமென்று அடியேன் கருதுகின்றேன். ஆசார்ய ஹ்ருதயம் என்கிற திவ்ய நூலின்கண் ஸ்ரீஅழகிய மணவாளப் பெருமாள் நாயனுர், இவருடைய பெருமையைப் பற்றி விரிவாக அருளிச் செய்துள்ளார். அவரது வாக்கியங்களைக் கொண்டே இரண்டொரு பெருமைகளை மட்டும் ஈண்டு விளக்குகின்றேன்.

ஸ்ரீ நாயனுர், ஆழ்வாருடைய அவதாரத்தைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது, அவரைத் தாழ்ந்த வருணத்தில் பிறந்தவர் என இகழலாகாது; உயர்ந்தவராகக் கருதுதல் வேண்டும்' என்கின்ருர்.

''வீட்டின்ப இன்பப் பாக்களில் திரவிய பாஷா நிரூபணஸமம் இன்பமாரியில் ஆராய்ச்சி'' என்பது ஸ்ரீ நாயனுர் வாக்கு. இங்கு, வீட்டின்பம் இன்பப்பா இன்பமாரி என்ற சொற்கள், முறையே இறைவனையும் திருவாய் மொழியினையும் ஆழ்வாரையும் குறிக்கின்றன. ''கனிவார் வீட்டின்பமே, என் கடற்படாவமுதே'' என்ற பாசுரத்திலிருந்து வீட்டின்பம் என்ற சொற்ருெடர் எடுக்கப்பட்டது. இறைவன் விஷயத்தில் உளங்கனிந்திருக்கும் பக்தர்களுடைய வீடுகளில். அவர்கள் விரும்பியதோர் பொருளாலாய வடிவத்தோடு, அவர்களுக்கு இன்பத்தை விளைத்துக்கொண்டு நிற்கும் நிலையினை, வீட்டின்பம் என்ற சொல் தெரிவிக்கின்றது 'அந்தமிழ் இன்பப்பாவினை அவ்வட மொழியை' என்ற ஸ்ரீகுலசேகரப் பெருமாள் பாசுரத்திலிருந்து, இன்பப்பா என்ற சொற்ருெடர் எடுக்கப்பட்டது. அழகிய தமிழ்ச் சொற்களையுடைய தாய், இறைவனுடைய கல்யாண குணங்களைப் பற்றித் தெரிவிக்கின்ற காரணத்தால், மூதறிஞர்களுக்கு இன்பத்தை விளைக்கின்ற திருவாய்மொழி, இன்பப்பா எனப்பட்டது.

'வண்டமிழ் நூற்க நோற்றேன் அடியார்க்கு இன்ப மாரியே' என்ற ஆழ்வார் திருப்பாசுரத்திலிருந்து, இன்பமாரி என்ற சொற்ருெடர் எடுக்கப்பட்டது. அடியவர்களாகிய ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் திருவாய் மொழியினடியாக இன்பத்தைப் பெய்தலால், ஆழ்வார் இன்பமாரி எனப்படுகின்ருர். 'இறைவன் விரும்பி ஏற்றுக்கொண்ட திருமேனியைத் தாழ்ந்த திரவியத்தாலாயது என்று நினைத்தால் அது குற்றமாவது போலவும், அவ்வாறே இறைவன்விரும்பி ஏற்றுக்கொண்ட திருவாய் மொழியைத் தாழ்ந்த பாஷையாலாயது என்று நினைத்தால் அது குற்றமாவது போலவும் இறைவன் விரும்பிக்கொண்ட ஆழ்வாருடைய திருமேனியைத் தாழ்ந்த வருணத்தில் தோன்றியது என நினைத்தல் குற்றமாம்' என்கிருர். இரும்பைப் பொன்னுக்குவது போல, இறைவன் ஆழ்வாரது திருமேனியை அப்பிராகிருதமாக்கினுன் எனக் கொள்ளுதல் வேண்டுமென்பதாம்.

முற்காலத்தில், உயர்ந்த வருணத்தில் பிறந்தவர்களே உயர்ந்த வருணத்தாருக்கு ஆசாரியர்களாக வேண்டும். ஏனைய தாழ்ந்த வருணத்தில் பிறந்தவர்கள் உயர்ந்த வருணத்தவருக்கு ஆசாரியர்களாக இயலாது என்ற கருத்து நிலவியிருந்தது. அதனை மறுத்துக் கூறுகின்றார் நாயனார். வருணத்திற்கு உயர்வு என்பது இல்லை; ஞானத்தைப் பற்றித்தான் வருணத்திற்கு உயர்வு; ஞானமில்லையாயின் அது தாழ்ந்தது. ஞானத்தையுடைய கீழ் வருணமே மேல் வருணத்தைக் காட்டிலும் சிறந்ததாகும் என்பது நூல்களின் துணிபு. இதனை,

"மேற்பிறந்தா ராயினும் கல்லாதார்,
கீழ்ப்பிறந்தும்
கற்றா ரனைத்திலர் பாடு"

என்ற திருவள்ளுவர் வாக்கினால் நன்கு அறியலாம். இக்கருத்தினைக் கொண்டவர்கள் நமது முன்னோர்கள். ஆதலால், ஸ்ரீநாயனார் அவர்களும், ஆழ்வாருடைய பிறவியைப் பற்றித் தாழ்வாக நினைக்கலாகாது என்று ஈண்டு அறிவுறுத்துகின்றார். எனவே, ஆழ்வாரை உயர்ந்த வருணத்தில் பிறந்தவர்களும் ஆசாரியராகக் கொள்ளுதல் கூடும் என்ற கருத்தினை வெளியிட்டருளினார் நாயனார்.

இனி, ஞானத்தால் உயர்ந்தார்களாயினும் பிறவியினால் தாழ்ந்தவர்களுக்கு, பிறவியினால் உயர்ந்தவர்களுக்கு உண்டாகும் ஒளியில்லையே என்பாரை மறுத்து, ஞானிகளுக்குத் தாழ்ந்த பிறவியே ஒளியினைத் தரவல்லது என்பதைத் தெரிவிக்கும் வகையில், ஆழ்வாருடைய பிறவி அவருக்கு ஒளியினைத் தந்தது என்கிறார்.

'தேவத்வமும் நிந்தையானவனுக்கு ஒளிவரும் ஜனிகள் போலவே பிரம்ம ஜந்மமும் இழுக்கு என்பார்க்குப் பண்டை நாளில் பிறவி உண்ணுட்டுத் தேசிறே'' என்பது நாயனார் வாக்கு. 'இறைவனுக்கு, அவனெடுத்த பிறவிகள் தாழ்ந்தனவாயினும் ஒளியினைத் தருவன போல, ஞானிகளுக்கு அவர்கள் எடுத்த பிறவிகள் தாழ்ந்தனவாயினும், ஒளியினைத் தருவனவாம், என்கிறார். ஸ்ரீராமபிரான் இராவணனை வதைத்த பின்னர், தேவர்கள் குழுமி, இராமனைத் தேவன் என்று புகழ்ந்தார்கள். அப்பொழுது அதனை மறுத்துத் தன்னை மனிதன் என்று இராமன் கூறினான். இதனால், இறைவன் அவதரித்துத் தாழ நின்ற நிலையில் அவனைத் தேவனாகக் கூறியதைத் தனக்குக் குறையாக நினைத்தான் என்பது தோன்றுகிறது. ஸ்ரீ கண்ணபிரான் கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்த காலத்தில் இடையர்கள் அவனைத் தேவனா? கந்தர்வனா? என்று ஐயுற்ற அப்போது, பெருமான் தன்னை அவர்களுடைய பந்துவாகக் கூறினான். இதனால் ஸ்ரீகண்ணபிரானும், தான் அவதரித்துத் தாழ நின்ற நிலையில் தன்னைத் தேவனாகக் கூறியதைத் தனக்குக் குறையாக நினைத்தான் என்பது தோன்றுகின்றது. இதனைக் கருத்திற்கொண்டு, 'தேவத்வம் நித்தையானவனுக்கு' என்று அருளிச் செய்கிறார் நாயனார். 'பல பிறப்பாய் ஒளிவரும் முழுநலம்' என்ற ஆழ்வார் திருப்பாசுரத்தை உட்கொண்டு, 'ஒளிவரும் ஜனிகள் போலே' என்கிறார். இது எடுத்துக் காட்டு. இறைவன் தாழ நின்ற நிலையில், அவனது குணங்கள் நன்கு விளங்குகின்றன. அவ்வாறே ஞானிகள் தாழ நின்ற நிலையில் தங்களுடைய ஞானம் நன்கு விளங்குகின்றது என்பதைத் தெரிவிக்கின்றார். 'பிரமனாய்ப் பிறக்கையும் எனக்கு வேண்டா' என்று ஞானி கூறுகின்றானதலால், ஞானிகள் பிரம ஜந்மத்தைக் குறையாக எண்ணினார்கள் என்பது புலனாகிறது. அது கருதி, 'பிரம ஜந்மமும் இழுக்கு என்பார்க்கு' என்று ஸ்ரீ நாயனார் அருளிச் செய்கிறார்.

இறைவன் மாட்டும், அவனது அடியவர் மாட்டும் பணிந்து நடப்பதற்குத் தகுதி வாய்ந்தது தாழ்ந்த பிறப்பு. உயர்ந்த பிறப்பாயின் அடியவர் மாட்டுப் பணிவதற்குத் தடை செய்யும். ஆதலால் ஞானிகள் உயர்ந்த பிறப்பினை வெறுக்கின்றனர்; தாழ்ந்த பிறப்பினை விரும்புகின்றனர். அங்ஙனம் விரும்பத் தக்க பிறவி ஆழ்வாரது. இது பரமபதத்தில் கைங்கரியத்திற்காக நித்திய சூரிகள் கொள்ளும் பிறப்புக்களைப் போன்றது என்பார், 'பண்டை நாளில் பிறவி உண்ணுட்டுத் தேசிறே' என்கிறார். பண்டை நாள்' என்று தொடங்கும் திருவாய் மொழியில், ஆழ்வார், தம்மைக் கைங்கரியஞ் செய்யும் குடியில் பிறந்தவராக அருளிச் செய்கிறார். 'பல்படிகால் குடி குடி வழிவந் தாட்செய்யும் தொண்டர்' 'உன்பொன்னடிக்கடவாதே வழி வருகின்ற அடியர்; 'தொல்லடிமை வழிவருந் தொண்டர்' என்பன ஆழ்வாருடைய திருவாக்குகள். இதனால், ஆழ்வாருடைய பிறவியானது அவர் செய்யும் கைங்கரியத்திற்குத் தகுதியானது என்பது பெற்

ரும். அதனால், 'உண்ணாட்டுத் தேசு' என்று போற்றப்படுகின்றது. இறைவனிடத்தில் வெறுப்புற்ற மக்களை மிகுதியாகக் கொண்டுள்ள நாடாதல் பற்றி இந்நாட்டினைப் புறநாடு என்றும், இறைவனுடைய அநுபவமே தங்களதாகக் கொண்டு இயங்கும் நாடாதல் பற்றி விண்ணாட்டினை உள்நாடு என்றும் கூறுவர். அந்நாட்டிலுள்ள, 'திருமேனி உண்ணாட்டுத் தேசு' எனப் படுகிறது. அது போன்றது ஆழ்வாருடைய திருமேனி என்று அருளிச் செய்கிறார் நாயனார். 'ஆழியங்கைப் பேராயர்க்காளாம் பிறப்பு-உண்ணாட்டுத் தேசன்றே' என்ற திருப்பாசுரத்தில் நின்றும் உண்ணாட்டுத்தேசு என்ற சொற்றொடர் எடுக்கப்பட்டதாமெனஅறிக. இதனால் ஆழ்வாரது திருமேனி, தாம் செய்கின்ற திருத்தொண்டிற்குத் தகுதியானது பற்றி ஆன்மாவிற்கு ஒளியினைத் தரவல்லது என்பது விளக்கி அருளிச் செய்யப்பெற்றது.

இனி, ஆழ்வாருடைய பிறப்பு, பரோபகாரமானது என்பதை விளக்கும் வகையில், பிராட்டி பரதாழ்வான், கண்ணன் என்கிற இவர்களைக் காட்டிலும் மிகவும் உபகாரமானது என்று அருளிச் செய்கிறார்.

'ஜனக தசரத வசுதேவ குலங்களுக்கு மூத்த பெண்ணும் நடுவில் பிள்ளையும் கடைக்குட்டியும்போல இவரும் பிறந்து புகழும் ஆக்கமும் ஆக்கி அஞ்சிறையும் அறுத்தார்' என்பது ஸ்ரீ நாயனார் வாக்கு. ஜனக குலத்திற்கு மூத்த பெண்ணாகிய பிராட்டி பிறந்து புகழை உண்டாக்கினாள்; தசரத குலத்திற்கு நடுவில் பிள்ளையான பரதன் பிறந்து ஆக்கத்தை உண்டாக்கினான்; வசுதேவ குலத்தில் கடைக்குட்டியான கண்ணன் பிறந்து அஞ்சிறையை அறுத்தான்; ஆழ்வாரும் பிறந்து தம்முடைய ஊருக்குப் புகழுண்டாக்கினார்; ஆக்கத்தைத் தந்தார்; அஞ்சிறையை அறுத்தார் என்று கூட்டிக் கொள்ளுதல் வேண்டும். பிராட்டி இராமனை மணந்ததால் ஜனக குலத்திற்குப் பெருமை ஏற்பட்டது. பரதன், முடிதுறந்து சடை புனைந்து வற்கலையுடுத்துத் தரைக்கிடை கிடந்தானாதலால் தசரத குலத்திற்கு முன்பில்லாத ஏற்றமுண்டாயிற்று. மூத்தார் இருக்க இளையார் முடிசூடலாகாது என்ற குலமரியாதை பரதனுக்கு முன்புள்ளாரிடத்தில் இருந்தது. பரதன், மூத்தவரான பெருமாளைப் பிரிந்ததனாலுண்டான துன்பத்தையும் அடைந்தானாதலால் அக்குலத்திற்கு முன்பில்லாத ஏற்றமுண்டாயிற்று என்பதாம். கண்ணன் பிறந்த போது வசுதேவருடைய காலில் உள்ள விலங்கு அறுபட்டது; அதனால், கண்ணன் அஞ்சிறையை அறுத்தானாகிறான். இம் மூவர் செய்த செயல்களை ஆழ்வாரும் செய்துள்ளார்; ஆழ்வார் பிறந்ததனால் திருக்குருகூருக்குப் புகழுண்டாயிற்று; 'மலிபுகழ் வண் குருகூர்ச் சடகோபன்' என்று ஆழ்வாரே அருளிச் செய்துள்ளார். திருக்குருகூர் என்றால் நாடு கைகூப்பி வணங்கும் பெருமை பெற்றது ஆழ்வாருடைய அவதாரத்தால் என்பது தெளிவு; எனவே ஆழ்வார், அவருடைய குலத்திற்குப் புகழை உண்டாக்கினாராவர். 'குடிக்கிடந்து ஆக்கஞ் செய்து நின் தீர்த்தவடிமைக் குற்றேவல் செய்து' என்று அருளிச் செய்ததனால் பரதனைப் போலவே குடிக்கிடந்து ஆக்கஞ் செய்தனர் என்பது தெரிகிறது. ஆழ்வாரது குலம் அடிமை செய்யும் குலம். அக் குலத்திற்குப் புகழுண்டானது போல ஆக்கமும் உண்டாயிற்று. இறைவனுக்கு அடிமை செய்து நிற்பதே குல மரியாதை; அதற்கு மேல் இறைவனைப் பிரிந்து ஆற்றமாட்டாமல், காண வாராயென்றென்று கண்ணும் வாயுந் துவர்ந்து, கண்ண நீர் கைகளாலிறைத்து, இட்டகால் இட்டகையாம்படி செயலற்றவராகித் தரைக் கிடைக் கிடந்து அன்பின் மேலீட்டால், இக் குடிக்கு முன்பில்லாத ஏற்றத்தையும் உண்டாக்கினார் என்பது தெரிகிறது. ஆழ்வாருடைய பிரபந்தத்தைக்கற்கிற வழியாலே, ஆழ்வாரோடு தொடர்பு கொண்டவரான இவர்களுடைய சம்சாரமாகிற தனிச் சிறையை அறுத்தார். 'அறுவர்தம் பிறவி அஞ்சிறையே' என்ற ஆழ்வார் திருவாக்கினால் இது தெளிவாகிறது. எனவே பிராட்டி, பரதன், கண்ணன் என்கிறவர்கள் பரோபகாரம் பண்ணினாலும், அது தேகாநுகூலமானதேயாகும்; ஆழ்வாருடைய பரோபகாரம் ஆத்மாநுகூலமானதாகும். இது ஆழ்வாருடைய பரோபகாரத்திற்கு உண்டான தனிச் சிறப்பாகும். எனவே, ஆழ்வாருடைய பரோபகாரத் தன்மையை அருளிச் செய்தார் நாயனார்.

இனி, ஆழ்வாருடைய பிறப்பினால் உலகத்திற்கு உண்டான நன்மைகள் மிக்க அழகுபெற விளக்கப் பெற்றுள்ளன. ''ஆதித்ய ராமதிவாகர அச்யுதபாநுக்களுக்குப் போகாத உள்ளிருள் நீங்கி, பிறவிக் கடல் வற்றி, விகஸியாத போதிற் கமலம் மலர்ந்தது வகுள பூஷண பாஸ்கரோத

யத்திலே !'' என்பது ஸ்ரீநாயனுர் வாக்கு. ஆதித்யனுக்குப் போகாத உள்ளிருள் நீங்கி, ராமதிவாகரனுக்கு வற்ருத பிறவிக்கடல் வற்றி, அச்யுதபானுவுக்கு மலராத இருதயகமலம் மலர்ந்தது வகுளபூஷண பாஸ் கரோதயத்திலே. சூரியன் போக்காத உள்ளிருளாகிய அறியாமையை ஆழ்வார் அகற்றினுர்; இராம திவாகரன் இராக்கதர்களாகிற கடலை வற்றப் பண்ணினுன் ; பிறவிக் கடலை வற்றப் பண்ண இயலாதவன் ஆனுன். ஆழ்வார் பிறவிக்கடலை வற்றப் பண்ணினுர். அச்யுதபானுவாகிற கண்ணன் உலகமாகிற தாமரையை அலரச் செய்தான் ; உள்ளமாகிற தாமரையை அலர்த்த இயலாதவனுனுன். ஆழ்வார் உள்ளமாகிற தாமரையை அலர்த்தினுர். ஆழ்வாருக்கு ஆயிரம் பாசுரங்களாகிற கிரணங்களும் உண்டு. சூரியன் தனது கிரணங்களால் இருளைப் போக்குவது போன்று, ஆழ்வார் தம்முடைய பாசுரங்களால் அறியாமையைப் போக்கிஞர் ; சூரியனுடைய நடுவில் ஸ்ரீ மந் நாராயணன் வாசஞ் செய்வது போல ஆழ்வாருடைய திருவுளக் கமலத்தில் ஸ்ரீ மந் நாராயணன் வாசஞ் செய்கிருன்:

''கண்கள் சிவந்து பெரியவாய்
வாயுஞ் சிவந்து கனிந்துள்ளே
வெண்பல் இலகு சுடரிலகு
விலகு மகர குண்டலத்தன்
கொண்டல் வண்ணன் சுடர்முடியன்
நான்கு தோளன் குனிசார்ங்கன்
ஒண்சங் கதைவா ளாழியா
ஞெருவ னடியே னுள்ளாலே.''

என்ற ஆழ்வார் திருப்பாசுரத்தால் இது நன்கு விளங்கும். சூரிய மண்டலத்தைக் கண்டு அனைவரும் வணங்குகிருர்கள் ; ஆழ்வார் திருநகரியை நோக்கி அனைவரும் வணங்குகிருர்கள்; ஆதலால், ஆழ்வார் சூரியனேடு ஒப்பிடப்படுகிருர் என அறிக.

இனி, இறைவன் ஆழ்வாருக்குத் திருவருள் செய்தது யாது கருதி? திருவருள் எத்தகையது? திருவருளால் ஆழ்வார் எத்தன்மையரானுர் ? என்பதைப் பற்றி விளக்குகின்ருர் ஸ்ரீ நாயனுர்.

''கோவ்ருத்திக்கு நெருஞ்சியைப் புல்லாக்கினவன் ஜகத் இதார்த்தமாக எனக்கே நல்லவருள்கள் என்னும்படி ஸர்வ ஸௌஹார்த்த பிரஸாதத்தை ஒருமடை செய்து இவரைத் தன்னுக்க லோகமாகத் தம்மைப்போல ஆக்கும்படி ஆனுர்'' என்பது ஸ்ரீநாயனுர் வாக்கு. இறைவன், கண்ணனுய் அவதரித்த காலத்தில், பசுக்களை விரும்பி மேய்க்கலானுன்; பரமபதத்திற் காட்டிலும் பசு மேய்ப்பதை விரும்பினுன்; '' திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி'' என்ற ஆழ்வார் திருவாக்கினுல் இதனையறியலாம். ஆதலால் பசுக்களுக்கு இனிய உணவான புல்லுண்டாம்படி நெருஞ்சிக் காட்டைப் புல்லுள்ள காடாகும்படி செய்தான்; இதனைக்கருதி ''கோவ்ருத்திக்கு நெருஞ்சியைப் புல்லாக்கினவன்'' என்ருர். பசுக்களைக் காப்பதுபோல உலகத்தைக் காப்பவன்தானே யாகையாலே இறைவன் உலக நன்மைக்காக, ''எனைத்தோர் பிறப்பும்—எதிர் சூழல்புக்கு—எனக்கே அருள்கள் செய்ய—அம்மான் திரிவிக்கிரமனை—விதி சூழ்ந்தது'' என்று ஆழ்வார் அருளிச் செய்யும்படி எல்லாவுயிர்களிடத்தும் செய்யும் அன்பின் காரியமான திருவருளை ஆழ்வார் ஒருவரிடத்தில் செய்தான்; ''நல்லவருள்கள் நமக்கே தந்தருள் செய்தான்'' என்பது ஆழ்வார் திருவாக்கு. இதனைக் கருதி ''ஜகத்திதார்த்தமாக எனக்கே நல்லவருள்கள் என்னும்படி ஸர்வ ஸௌஹார்த்த பிரஸாதத்தை ஒருமடை செய்து'' என்ருர். அறிவு ஆற்றல் அற்ற ஆழ்வாரைத் தன்னேடு ஒத்த அறிவு ஆற்றல் உடையவராகும்படி இறைவன் செய்தான். ''என்னைத் தன்னுக்கி என்னுல் தன்னை, பதவிய இன்கவி பாடிய அப்பனுக்கு'' என்ற ஆழ்வார் திருவாக்கினுல் இது விளங்கும். இதனைக் கருத்திற் கொண்டு, 'இவரைத் தன்னுக்க' என்று அருளிச் செய்தார்.

இங்ஙனம் இறைவனுல் திருந்தின இவர், தம்முடைய தொடர்பு பெற்ருர் அனைவரையும் தம்மைப்போலவே இறைவழிபாடுடையராம்படி செய்தனர். இதனை ''ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடைய பேரும் தார்களுமே பிதற்றக் கற்பு வானிடறி'' என்ற ஆழ்வார் திருவாக்கினுல் அறியலாம். இதனையுட் கொண்டு, ''லோகமாகத் தம்மைப் போல ஆக்கும்படி ஆனுர்'' என்று அருளிச் செய்தார். இதனுல் ஆழ்வார் இறைவனுடைய திருவருளாலே திவ்ய ஞானம் பெற்றவர் என்பது தெளிவு. இத்தகைய பெருமைகள் பலவற்றையும் ஸ்ரீ நாயனுர் அருளிச் செய்துள்ளார். அவற்றையெல்லாம் ஈண்டு எடுத்துரைப்பிற் பெருகுமெனக் கருதி விடுத்தேன். வாழ்க மாறன்மலரடி ! ★

# தருமம் அறிந்தவன்:

மகாவித்வான் ஸ்ரீமத் பி. ப. அண்ணங்கராசார்ய சுவாமிகள், காஞ்சிபுரம்

பிராட்டி இராவணனுக்கு உபதேசஞ் செய்யும் இடத்து "விதிதஸ் ஸஹி தர்மஜ்ஞ" என்று பெருமானைத் தர்மஜ்ஞர் எனக் கூறினள். தர்மஜ்ஞர் என்பதற்குத் தருமம் அறிந்தவர் என்று பொருள். ஆண்டாள், நாச்சியார் திருமொழியில் (14-6) "தருமம் அறியாக் குறும்பனை" என்று கண்ணபிரானைத் தருமம் அறியாதவன் என்றாள். அவ்வியல்புக்கு நேர்மாறாகத் தருமம் அறிந்தவன் எனப்படுகிறான் இராமபிரான். இராமனைப் பற்றி இங்குப் பேசுவோம். ஆண்டாளுடைய திருவாக்கைப் பற்றித் தனியேயொரு கட்டுரை தருவோம்.

## தருமம் :

தருமமாவது என்ன என்று ஆராயவேணும். சாத்திரங்களில் பலவகைத் தருமங்கள் சொல்லப்பட்டிருந்தாலும், இராமன் அறிந்ததாகச் சொல்லும் தருமம் எதுவாய் இருக்கக் கூடுமென்று பார்க்க வேணும். சுந்தர காண்டத்தில் (38-41) "ஆந்ருசம்ஸ்யம் பரோ தர்ம: த்வத்த ஏவ மயாச்ருத:" என்பது பிராட்டியின் வார்த்தையாகக் காண்கிறது. ஆந்ருசம்ஸ்யம் ஆவது இரக்கம்; அதுதான் பரம தர்மம் என்று இராமனுடைய கொள்கையாம். ஆகவே இரக்கம் அறிந்தவன் என்று பொருள் கொள்ளலாம். அதாவது இரக்கமுடையவன் என்றபடி. வேதாந்த தேசிகர் தசாவதார தோத்திரத்தில் ஒவ்வோர் அவதாரத்திற்கும் தனித்தனியே ஒவ்வொரு சுலோகம் இட்டு, முடிவில் பத்து அவதாரங்களையும் சேர்த்து ஒரே சுலோகத்தில் சொல்லும்போது, ஒவ்வொர் அவதாரத்தையும் ஒவ்வொரு விசேஷணம் இட்டுச் சொல்லி வருகையில், ஸ்ரீ ராமாவதாரப் பிரஸ்தாவத்தில் 'கருணா காகுஸ்த !' என்று கூறியிருப்பதனால், இராமன் கருணையே வடிவெடுத்தவன் என்று சொல்லத் தகுதியுடையவன்.

## கருணை :

கருணை யாவது என்ன என்பதையும், பெருமாளிடத்தில் காணும் கருணை எப்படிப்பட்டது என்பதையும், இங்கே விவரிக்கப் பிராப்தமாகிறது. அமரகோசத்தில் (1-7-18) 'காருண்யம் கருணா க்ருணா, க்ருபா தயா அநுகம்பா ஸ்யாத் அநுக்ரோசோபி" என்று ஏழு பதங்கள் பரியாய நாமங்களாகப் படிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுள், அநுகம்பா, அநுக்ரோச: என்னும் பதங்களும் பரியாயமாகச் சேர்ந்திருக்கின்றபடியால், அப்பதங்களின் பொருளேதான் கருணையின் பொருளுமாகக் கடவது. துக்கத்தினால் நடுங்குபவனைக் கண்டு தானும் நடுங்குகை அநுகம்பா; துக்கத்தினால் அழுகிறவனைக் கண்டு தானும் அழுகை அநுக்ரோசம்; இதுவே உலகில் அனைவரும் இசைய வேண்டிய பொருளாகும். இதுதான் கருணை யெனப்படும். ஆகவே, பிறர் படும் துயரைக் கண்டு தானும் ஐயோவென்று துயருற்றிருக்கை கருணை; அதை நன்கறிந்து அப்படியே வர்த்திப்பவன் இராகவன் என்றதாயிற்று. இக்குணம் இராமாயணத்தில் பல இடங்களில் காணப்படுமாயினும், சில இடங்களை மட்டும் இங்கு எடுத்துரைத்து அநுபவிப்போம்.

தசரத மன்னவன் இராமனுடைய திருக்குணங்களையும் அவனுக்கு சனங்களிடத்திலும், சனங்களுக்கு அவனிடத்திலும் அமைந்துள்ள அளவு கடந்த அன்பையும் நோக்கி, அவனை இளவரசாக முடிசூட்டி, அரசாட்சிச் செல்வத்தை அவனிடத்தில் ஒப்புவித்துத் தான் இளைப்பாற வேண்டுமென்று விருப்பங்கொண்டு, மந்திரிகளோடுங் கலந்து ஆலோசித்துத் தனது கருத்தைத் திடப்படுத்திக் கொண்டு, விரைவாகவே அதனைச் செய்து முடிக்கக் கருதி, அந்நாட்டிலுள்ள மன்னர்களையும் மகா சனங்களையும் எல்லாம் வரவழைத்துப் பெருஞ்சபை கூட்டி, அவர்

களுக்குத் தன் கருத்தை வெளியிட்டனன். அப்போது அவர்கள் யாவரும் அளவற்ற ஆனந்தம் அடைந்து, 'கிழவரே! நீர் ஒழிந்துபோம். இராமனுக்கே முடிசூட்டு வீராக' என்று மிகப் பெரிய கோஷமாகக் கூறினர். தன் விருப்பத்தை அனைவரும் ஆமோதித்தது பற்றி உள்ளம் பூரித்த தயரதன், இராமனிடத்தில் சகல ஜனங்களுக்கும் இங்ஙனம் அன்பு நிறைந்திருக்கும் காரணத்தைத் தான் அறிந்திருந்தும், அவர்கள் வாயிலாகவே அதை இனிதாகத் தெரிந்து கொள்ள விரும்பி, அவர்களை நோக்கி 'ஓ மன்னவர்களே! மகா சனங்களே! என் மனத்தில் தோன்றிய விருப்பத்தை நானே சுதந்திரனாய்ச் செய்து முடித்துக் கொள்ள வல்லவனாயிருந்தும், உங்கள் கருத்தையும் அநுசரித்து நடந்து கொள்ள வேண்டுமென்று எண்ணி உங்களையும் வரவழைத்துக் கேட்டேன். கேட்டவுடனேயே நீங்கள் 'கிழவா! ஒழிந்து போ, கிழவா ஒழிந்து போ, இராமனுக்கே முடி சூட்டவேணும்' என்று பேரிரைச்சல் செய்து கூறுவதை நோக்குங்கால், என் அரசாட்சியில் நீங்கள் யாவரும் மிகவும் துன்பம் அடைந்திருந் தீர்கள் போலவும், அந்தத் துன்பத்தை எப்போது தவிர்த்துக் கொள்ளப் போகிறோம் என்று சமயம் பார்த்திருந்தீர்கள் போலவும், நினைக்க வேண்டியதாகின்றதே; சக்கரவர்த்தியாகிய நீர் உம்முடைய விருப்பப்படி செய்து கொள்ளலாமே, எங்களைக் கேட்க வேணுமோ? என்று மரியாதையாக வார்த்தை சொல்லி இருக்கலாம் அன்றோ? அப்படிச் சொல்லாமல் என்பால் மிகவும் வெறுப்புத் தோற்றச் சொன்னீர்களே, இதற்கு என்ன காரணம் கூறுமின்?' என்றனன். அதற்கு அனைவரும், 'மன்னர் பிரானே! உன் மீது நாங்கள் யாதொரு குற்றமும் நினைத்திலோம்; நீ பெற்ற புதல்வன் எல்லையில்லாத நற்குணங்கள் அமையப் பெற்றவன் ஆதலின், அவனது திருக்குணங்களில் ஈடுபட்ட நாங்கள் அவனை அரசனாகப் பெற்று அவன்கீழ்க் குடிவாழ விரும்பினோம்; அவனது திருக்குணங்களைக் கேட்க விரும்புவாயாயின் சொல்லுகின்றோம். கேட்டருள்க கோமானே!' என்று பீடிகையிட்டு, இராமனது திருக்குணங்கள் பலவற்றையும் சொல்லி வருகின்றார்கள்.

**பரதுக்க துக்கம்:**

பிறர் துயருறக் கண்டால் தான் அபரிமிதமாகத் துயருறுபவன்; பிறர்க் கொரு மகிழ்ச்சியுண்டானால்தான் மிக மகிழ்பவன் என்பது சுலோகத்தின் (அயோ, *2-40*) பொருள். பிறருடைய மகிழ்ச்சியில் மகிழ்பவன் என்றது இருக்கட்டும். 'பிறர் துயருறக் கண்டால் தான் அபரிமிதமாகத் துயருறுபவன்' என்றார்களே, இதுதான் தயாளுவான புருஷனின் மிகச் சிறந்த உயர்ந்த தன்மை. இங்கு இராமனது கல்யாண குணங்களைச் சொல்லுவதாக மகுடமிட்டுச் சொல்லிவருகையில் (ச்லோ, *26*) அக் குணங்களினிடையே பரதுக்க துக்கித்வமாகிய இக் குணத்தைக் கூறியிருக்கையாலே, இது மிகச் சிறந்த நற்குணமேயொழியத் தீய குணம் அன்று என்பது வெளிப்படை. ஆனால் சிலர் துக்கப்படுகை யென்பது எவ்விதத்திலும் தீய குணமேயன்றோ என்று கலங்கி ஆட்சேபங்கள் செய்வதுண்டு. சகஸ்ர நாமத்தில் 'விகர்த்தா' என்கிற திரு நாமத்திற்குப் பாஷ்யம் அருளிச் செய்யா நின்ற பட்டர், அவர்களது கலக்கம் நீங்க ஆட்சேப பரிகாரம் செவ்வனே செய்தருளி யிருப்பதால், இங்கு விரிவு வேண்டா; அனந்த கல்யாண குண நிதியான எம்பெருமானைத் துக்கப்படுபவனாகச் சொல்லவே கூடாதென்றும், துக்கப்படுவதென்பது ஹேய குணமே யாகுமென்றும், நினைப்பவர்களைச் சுருக்கமாகத் தெளிவிக்கிறோம் இங்கு. துக்கப்படுவதென்பது தன் பொருட்டு என்றும் பிறர்பொருட்டு என்றும் இரண்டு விதம். தனக்கொரு துன்பம் நேர்ந்ததென்று துக்கப்படுவதானது தன் பொருட்டுத் துக்கம் எனப்படும். பிறர்க்கு நேர்ந்த துன்பத்தைப்பற்றித் துக்கப்படுவது பிறர்பொருட்டுத் துக்கம் எனப்படும். முந்தின துக்கத்தை ஹேயகுணமாக நினைக்க நியாயமுண்டு. பிந்தின துக்கத்தை ஹேய குணமாக நினைத்தல் மிகப் பிசகு; குணங்களில் தலையானது இதுவேயாகும். உலகத்தில் ஒருவன் துக்கப்படும்போது அந்தத் துக்கத்தைக் கண்டு கொண்டிரா நின்ற மற்றொருவன், தானும் துக்கப்படாமல் வாளா கிடந்தால், அவனைக் கல் நெஞ்சன் என்றும், ஈரநெஞ்சு இளநெஞ்சு இல்லாதவன் என்றும், வசை கூறுகிறோம். பிறர் துக்கிப்பதைக் கண்டு பரவசமாக ஒருவன் துக்கிப்பானாகில், அவனை ஈர நெஞ்சன் என்றும் இரக்க முள்ளவன் என்றும், பரம தயாளு வென்றும் சொல்லிப் புகழ்கிறோம். இவை இன்றாக ஒருவராலும் அபலாபம் செய்ய ஒண்ணாதவை. ஆகவே கருணையின் பொருளான பரதுக்க துக்கித்வம் என்பது, மிகச் சிறந்த குணங்களில் முதன்மையாகக் கணக்கிடக் கூடியதே யன்றித் தீயகுணமாக ஒருவராலுங் கூறவொண்ணாதது. எம் பெருமானிடத்தில் இக்குணம் ஒன்றை மறுத்து மற்றும் பலபல குணங்களை இசைந்தாலும்

பயனில்லை ; நிர்க்குணப் பிரமவாதிகளின் திரளில் தலைமை பெற வேண்டியதே.

ஆனால் இங்கு ஒன்று சொல்லலாம் ; பிறர் படும் துயரத்தைப் பரிகரிக்கக் கூடிய சக்தி நமக்கில்லாமையாலே, நாம் பிறர் துயரைக் கண்டு துயருறுவது இயல்பு. பிராணதார்த்திஹரன் என்று பெயர்படைத்துப் பரிபூர்ண சக்தி யுக்தனான எம்பெருமான், பிறருடைய துயரத்தைக் கண்டு தானும் துயருறக் காரணமேயில்லை — என்று. இங்கே அவசியம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களைத் தெளிவாகத் தெரிவிக்கிறோம். பிறர்படும் துயரத்தைக் கண்டு துயருறுகை என்கிறவொரு தன்மையும், பிறர்படும் துயரத்தை நீக்கத் தக்க சக்தியுடைமை என்கிறவொரு தன்மையும், ஒன்றோடொன்று முரண்பட்டவை யென்று நினைக்கலாகாது. 'அசக்தனே துயருறுவன், சக்தன் துயருறமாட்டான்' என்று நினைப்பது மருள்.

**காருணிகத்துவம் :**

தன் குழந்தைக்கு ஒரு துன்பம் நேர்ந்துவிட்டால், அதனை உடனே பரிகரிக்கக் கூடிய சக்தி மாதாவுக்கு இருக்கச் செய்தேயும், அப்படியே அத்துன்பத்தை அவள் பரிகரித்து விடச் செய்தேயும், குழந்தைக்குத் துன்பம் நேராமல் காக்க வேண்டியது நமது கடமையாயிருந்தும் ஏமாந்து போனோமே ; அந்தோ அநியாயமாய்க் குழந்தையைத் துடிக்க விட்டோமே ! என்று பலவாறாகக் கதறி வருந்தும் படியைக் காணாதார் உண்டோ? துச்சாசனன் கையிலே திரௌபதி பரிபவப்பட்டுக் கூவின போது, கண்ணபிரான் ஒருவாறு அவளது துயரைத் தீர்த்திருக்கச் செய்தேயும், "ஐயோ ! அவள் கூவினபோது நான் நேரில் சென்றிருந்து உதவாது ஒழிந்தேனே, ஐயோ அவளுக்குப் பரிபவம் நேர்ந்து அவள் கதறின பின்பு நான் காரியம் செய்தேனேயன்றி முதல் தன்னிலே பரிபவமே அவளுக்கு உண்டாகாதபடி ஜாகரூகனாய் இராது போனேனே ! அவளுக்கு நான் பெரிய கடனாளியாய் விட்டேனே, என் பிறப்பு என்னாயிற்று !" என்று, தன் காவற் சோர்வை நினைத்துத் திருவுள்ளம் வேவுண்டு வருந்தினபடியுண்டே ! அன்றியும், மடுவின் கரையிலே முதலையினால் அடர்ப்புண்ட கஜேந்திராழ்வானுடைய இடரை எம்பெருமான் தீர்த்தருளினான். எனினும், அவன் தான்பட்ட பரிதாபம் பேச்சுக்கு நிலமன்றே. ஆழ்வானும் பட்டரும் அன்றோ அதை எடுத்துரைத்து உருகினவர்கள். 'கெட்டேன் ! கெட்டேன்' என்று நொந்து கொண்டே எம்பெருமான் அரை குலையத் தலைகுலைய ஓடிவந்தான், என்கிறார்களே. இங்ஙனே பல்லாயிரம் எடுத்துக்காட்டத் தக்கவையுண்டு. இவற்றால் பரதுக்க துக்கித்துவ ரூபமான எம்பெருமானது காருணிகத்துவம் அசைக்கவொண்ணாதபடி தேறி நிற்கும். இதை இராமாயணத்தில் அநுபவிக்கலாம் இடம் காட்டுதும் காண்மின்.

**சமான சோகம் :**

பெருமாள் சுக்கிரீவனுக்காக வாலியைக் கொன்றார் ; வாலி மாண்டபின் சுக்கிரீவன் மிக வருந்தினான் ; அவனது வருத்தத்தைக் கண்டு பெருமாள் ஆற்ற கில்லாது தாமும் அபரிமிதமாக வருந்தி யதார் என்பதைக் கூறுகின்ற வான்மீகி (கிஷ் கிந்தா 24-24), சுலோகத்தில் 'ஸஞ்ஜாத பாஷ்பா:' என்றதும், 'முஹூர்த்தம் விமநாபபூவ' என்றதும், கல்நெஞ்சையும் உருக்கும் சொற்கள். சுக்கிரீவனுடைய அழுகை ஓய்ந்தும் இராமனுடைய அழுகை ஓய வில்லை என்கிறது 'ஸஞ்ஜாத பாஷ்ப' என்பது. சிலர் உள்ளே பசையில்லாமல் வெளியில் மாத்திரம் கண்ணீரை விட்டுத் துக்காபிநயம் செய்வதுண்டு. அப்படியல்ல ; மதியெல்லாம் உள் துலங்கி நின்றார் என்கிறது , 'ராமோ முஹூர்த்தம் விமநாபபூவ' என்பது. மேலே இருபத்தைந்தாம் சர்க்கத்தின் முதல் சுலோகத்தில், வாலியின் மரணத்தினால் தாரைக்கும் அங்கதனுக்கும் எவ்வளவு சோகமோ, அவ்வளவுக்குச் சிறிதும் குறையாத சோகம் பெருமாளுக்கும் இருந்தது என்கிறார் முனிவர், "ஸமாந சோக காகுத்ஸ்த" "என்பதனால். அந்த சர்க்கத்தின் முடிவிலும் (52), அதையே மீண்டும் மொழிகின்றார். ஆக இவற்றால், 'தர்மஜ்ஞ' என்பதன் பொருள் விவரிக்கப்பட்டது. இனி, ஸீதா விவாக காலத்தில் ஜனக சக்கரவர்த்தி கூறிய, 'இயம் சீதா' என்கிற சுலோகத்தில் 'ஸஹதர்ம சரீ தவ" என்று சொன்னதன் கருத்திற்கு இணங்கவும் சில நிருபணங்களைச் செய்வோம்.

**சரணாகத வத்சலன் :**

நாம் எல்லாம் விவாகம் செய்து கொள்ளும் போது 'இமாம் கந்யாம் தர்ம ப்ரஜார்த்தம் வ்ருணீஹே' என்று சொல்லி (அதாவது, இந்தப் பெண்ணைத் தர்மானுஷ்டானத்திற்காகவும் சந்தான விருத்திக்காகவும் பரிக்கிரகிப்பதாகச்

சொல்லிக்) கைப்பற்றுகிறோம். நம்போல்வாருடைய தர்மானுஷ்டானம் எதுவென்னில், இல்லறம் எனப்படுகிற கிருஹஸ்தாச்ரம தர்மானுஷ்டானமேயாகும். இல்வாழ்க்கைத் துணைவியாக அமைகின்ற மனைவியோடு கூடி சாஸ்திரோக்தங்களான தருமங்களை கிருஹஸ்தாச்சிரமிகள் அனுட்டித்து வருவதுண்டு. இராமபிரானுக்குச் சீதாபிராட்டியை ஜனக சக்ரவர்த்தி கன்னிகாதானம் செய்யும்போது, 'இயம் சீதா தவ ஸஹ தர்மசரீ' (இராமா நீ அனுட்டிக்கும் தருமத்திற்குத் துணைவியாமவள் இந்த சீதை) என்று சொல்லிக் கொடுத்திருக்கிறார். இராமன் அனுட்டிக்கும் தருமம் எதுவென்று பார்க்க வேணும். நாம் இக் கட்டுரையில் முன்னம் எடுத்துக் காட்டிய சுலோகத்தில் 'சரணாகத வத்ஸல:' என்று கூறுகின்றாள். பெருமாளை தர்மஜ்ஞர் என்று சொல்லி உடனே அதை விவரிக்கிற வார்த்தையாக 'சரணாகதவத்ஸல:' என்று உரைத்தாள். இதனால், இராமபிரான் இவ்வவதாரத்தில் கைப்பற்றின தருமம் சரணாகத பரித்ராணமே (அதாவது அடைக்கலம் புகுந்தவர்களைக் காத்தருள்வதே) என்று தேறுகின்றது. பிரபந்த ஜன சம்ரக்ஷணமே பெருமாளுக்குப் பரம தர்மம். இத் தருமத்திற்குத் துணைவியாகவே பிராட்டி அமைந்தாள். ஆனது பற்றியே திருமந்திரார்த்தத்தில் பிள்ளை லோகாசாரியர் "இரட்சிக்கும் போது பிராட்டி சன்னிதி வேண்டுகையாலே இதிலே ஸ்ரீஸம்பந்தம் அநுஸந்தேயம்" என்றும், "இவள் சன்னிதியாலே காகம் தலை பெற்றது, அதில்லாமையாலே இராவணன் முடிந்தான்" என்றும் அருளிச் செய்துள்ளார். இராமாயணத்தில் இது பல பல விடங்களிலும் காணப்படுகிறது. கம்பராமாயணம் வாலிவதைப் படலத்தில் ஒரு செய்யுளினால் இது நன்கு மூதலிக்கப்படுகிறது. அதனை மேலே காண்க.

"கோவியல் தருமம் உங்கள்
குலத்துதித் தோர்கட் கெல்லாம்
ஓவியத் தெழுத வொண்ணா
வுருவத்தா யுடைமை யன்றோ?
ஆவியைச் சனகன் பெற்ற
அன்னத்தை அமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னைத்
திகைத்தனை போலுஞ் செய்கை"

**தேவியின் பரிவு:**

இச்செய்யுள் இன்சுவையே வடிவெடுத்தது. பிராட்டி அருகே இல்லாமையினால் தான், இராமன் வாலியை வதஞ்செய்ய நேர்ந்தது என்கிற தத்துவம் இங்கு வெளியாகின்றது. இச்செய்யுளில் 'தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலுஞ்செய்கை' என்றது, இராமாயணக் கடலில் மிக முக்கியமாகக் கொள்ளத் தக்க மகாரத்தினம் போன்ற ஒரு சம்பிரதாயப் பொருளையுணர்த்துகின்றது. அதைச் சிறிது விவரிப்போம். பகவத் கீதையில் கண்ணன் தன்னுடைய அவதாரத்தின் பயனை அருளிச் செய்யுமிடத்து, 'பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய சதுஷ்க்ருதாம்" என்று, நல்லவர்களைப் பாதுகாப்பதும், தீயவர்களைத் தொலைப்பதுமாகிய செயல்களை அவதாரத்திற்குப் பயனாகக் கூறியுள்ளான். இவ்விரண்டு செயல்களும் இராமாவதாரத்தில் விசேஷமாக நடைபெற்றிருப்பதை, நாம் ஸ்ரீ ராமாயண முகத்தினால் அறிகிறோம். அதில் அரிய பெரிய விசேஷமொன்றும் தெரியவருகின்றது. அது யாதெனில், சீதா பிராட்டி இராகவனோடு கூடியிருக்குங் காலத்தில் எப்படிப்பட்ட அபராதிகளுக்கும் விநாசம் பிராப்தமாகவில்லை; பெருமாள் அவளைவிட்டுப் பிரிந்திருக்கிற காலத்தில்தான் அபராதத்தில் குறைய நின்றவர்களையும் கண்ணற்றுக் கொலை செய்து, தொலைக்கிறார் என்பதேயாம். இது இராமாயணத்தில் ஆதியோடு அந்தமாகவுள்ள கதைகளினால் நன்கு தெரிகின்றது.

இராமன் முதன்முதலாகச் செய்தது தாடகையினுடையவும், சுபாகு முதலிய அரக்கர்களினுடையவும் வதம். முதன் முதலாகப் பெண் கொலை புரிந்தார் என்னும் அபவாதம் இற்றைக்கும் அழிந்த தில்லை. அப்படிப்பட்ட கொலைத் தொழில் செய்த காலத்தில் பெருமாளுக்குப் பிராட்டியின் சம்பந்தம் உண்டாகவேயில்லை. பிரமசாரியாய் இருக்கும் போது தானே மாமுனி வேள்வியைக் காத்தது. அப்போது பிராட்டி அருகே இருந்திருந்தால் தாடகாவதம் நேர்ந்தே யிராது. அவள் அதன் அருகேயில்லாதது பற்றியே பெருமாள் பெண் கொலையென்றும் பாராமல் தாடகாவதம் பண்ண நேரிட்டது. பிறகு மிதிலாபுரிக்குச் சென்று பிராட்டியை மணம் புணர்ந்தார். அது முதலாகப் பிராட்டியோடு கூடியிருக்கிறவரையில் ஒரு கொலைத் தொழிலும் நடந்ததில்லை. தீவிரமான அபராதம் செய்தவர்களுக்கும் ரக்ஷணம் நேர்ந்திருக்கின்றதே அன்றி, கொலை என்பது ஒருவர்க்கும் கிடையாது. இதன் மேல் சிலர்சொல்லக் கூடிய ஆட்சேபங்களையும் பிரசங்கித்துப் பரிகரிக்கிறோம்.

# சமயமும் சமுதாயமும்

(தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள், M.L.C.)

—o—

**சமய இயல் :**

சமயம் ஒரு தத்துவம் ; தத்துவமட்டுமன்று; நல்வாழ்க்கை முறை. சமயம் கடவுளை முழு முதலாகவுடைய நெறி; மனித சமுதாயத்தை மையமாகக் கொண்டு விளங்கும் நெறி; உயர்ந்த சமயம், நம்பிக்கையில் மட்டும் நிற்ப தன்று; நல்லறிவிலும் சிறந்து விளங்கும். உண்மையான சமயம் விந்தைகள் பல செய்யும் விஞ்ஞானத்திலும் மேம்பட்டது. சமயம் ஒரு மாரு உண்மை; அறிவுக்குப் புலப்படுவது. சாதாரண அறிவுக்கன்று; வளர்ந்த முழுநலம் சான்ற மெய்யறிவில் சிறந்து விளங்குவது. விஞ்ஞானம் இயற்கை ஐம்பெரும் பூதங்களால் விளையும் துன்பத்தைத் தடுத்து நிறுத்துகிறது. புறப்பகை வென்று விளங்குவது நல் விஞ்ஞானம்; பருவுடலுக்குச் சுவை தேர்ந்து உண்ணும் உணவுப் பொருள்களை வழங்கி இதமான இன்பத்தைத் தருவது. புறப்பகையை வென்றுல் போதுமோ?

வெளி வெப்பம் வென்றடக்கும் தட்பவெப்பச் சீதள அறையில் இருந்தாலும் இதயம் மகிழ்ந்து விடுவதில்லை. எழிலுறு மாளிகையில் இருந்தாலும் இதயம் மகிழ்ந்து விடுவதில்லை. நெஞ்சு உவந்து மகிழ்தலுக்கு உட்பகையை வெற்றி காணவேண்டும். அறுபகையை அவனருளால் செறல் வேண்டும். அஃது உடன் பிறந்தே கொல்லும் வியாதி அன்றே? உட்பகை வெல்லும் மெய்யறிவே உண்மைச் சமயமாகும்.

**சமயமும் சமுதாயமும் :**

இன்றைய மானுடச்சாதியின் வாழ்க்கைநிலையினை எண்ணிப் பார்த்தால் நீக்க முடியாத ஏக்கமே மேலிடுகிறது. மனிதன் கடந்த பல நூற்றுண்டுகளாகத் திறமையாகவே வாழ்ந்து வருகிறுன்; மாட மாளிகை, கூடிகோபுரங்களைக் கட்டி முடித்து உள்ளான்; அவன் வாழ்க்கையில் அடிக்கடி நேர்ந்த இயற்கை இன்னல்களையும் வெற்றி பெற்றிருக்கிறுன். அவனைச் சூழலச் சிதறடித்த காலத்தை வென்றிருக்கிறுன். பேருலகத்தை இணைத்து வெற்றி பெற்றிருக்கிறுன். அம்மம்ம! அரிய சாதனை! அற்புதச் சாதனை! என் பாட்டி இனிதாகக் காட்டிச் சோறூட்டிய அம்புலியைக் குடியேறிக் கூடாரமாக்கும் குரல் கேட்கிறது! அவனுடைய அறிவுச் சுவடுகள் பதியாத மண்டலங்கள் இல்லை; அண்டங்கள் இல்லை; நினைந்து நினைந்து மகிழத் தக்க சாதனை!

ஆனுலும், சாதனையின் மகிழ்ச்சியை முழுவதும் துய்க்க முடியவில்லை. காரணம் உட்பகை ஒய்ந்தபாடில்லை. நிலவுலகங்கள் இணைக்கப் பெற்றன; ஆனுல் இணைக்க வேண்டிய சிறந்த நெஞ்சங்கள் இணைக்கப் பெறவில்லை. செல்வங்கள் செழித்து வளர்ந்தன; ஆனுல் அல்லல் தரும் வறுமை போய்விடவில்லை. கருத்துக்கள் வளர்ந்தன. ஆனுல் மோதிக்கொள்ளும் விலங்குணர்ச்சி போனபாடில்லை. உலாவும் மாளிகைகள் உயர்ந்தன; ஆனுல் ஒழுக்கத்தில் உயர்வில்லை. திருக்கோயில்கள் எழுந்தன; ஆனுல் சிறைச்சாலைகள் மூடப்பெறவில்லை. கடவுளின் கருணை பேசப்பெற்றது; ஆனுல் இரக்கம் என்பதொன்று எள்ளளவும் சிந்தையில் உண்டாகவில்லை. இஃதென்ன விந்தை! மாளிகை கட்டி முடிப்பது வாழ்ந்தின்புறவா? அல்லது வாழ்விழந்து துன்புற்று அல்லல் படவா? இந்த அவல நிலைக்குக் காரணம் உண்மையான சமயச் சீலம் உலகில் தோன்றி வளரவில்லை என்பதேயாம்.

**சமயம் :**

சமயநெறி என்பது உடற்சார்புடையதன்று நீங்கா உயிர்ச்சார்புடையது. ஆனுல் இன்றே சமயம் பெரும்பாலும் உடற்சார்புடையதாக மட்டுமே விளங்குகிறது. சமயச் சின்னங்களை நெற்றிகள் தாங்கினுலும் நெஞ்சங்கள் தாங்கவில்லை. மைபொதி விளக்கனையார் மலிந்து வருகின்றனர். ''பூசு நீறு போல் உள்ளும் புனிதர்கள்'' என்ற சேக்கிழாரின் செந்நெறிக்கு ஏற்றவாறு நெஞ்சுணர்வில் தூய்மை படரவில்லை சமயமும் ஒரு வளர்ந்த அறிவியலேயாம். எப்படி விஞ்ஞானத்தின் விளைவு வீணுகப் போவதில்லையோ, அது போலவே சமயச் செந்நெறியின் பயனும் வீண் போவதில்லை தண்ணீரில் கிடப்பது மீனுக்குப் பொழுதுபோக்கன்று; அஃது ஒரு பகுதி வாழ்க்கையுமன்று; தண்ணீரில்கிடப்பதேதான்மீனுக்கு வாழ்க்கை. அதுபோன்று நமக்கும் சமய வாழ்க்கை அமைய வேண்டும்.

ஆனுல் சமயம் சிலருக்குப்பொழுதுபோக்கு. பலருக்குப் போலிப் பாவக்கழுவாய். ஒரு சிலருக்கு அதுவே வாழ்க்கைத் தொழில். வேறு சிலருக்கு வளம்பல படைத்து வாழும் வகை. இதுவா சமயம்? ''நின்றும் இருந்தும் நடந்தும் கிடந்தும் எழுந்தும்—''என்ற திருஞான சம்பந்தர் திருமொழியை எண்ணுங்கள்! ''என்னுள்ளே உயிர்ப்பாய்ப் புறம்போந்துபுக்கு இயங்கினுன்'' என்ற அப்பரடிகளின் அருள்மொழியை எண்ணுங்கள்! சமய ஒழுக்கம் ஒரு மனிதனின் வாழ்க்கை முழுவதும் கவர்ந்து கொண்டிருக்க வேண்டும். சிந்தனையும், செவ்விய சொல்லும்

செயலும் சமயச் சீலம் நிறைந்ததாக இருக்க வேண்டும். அவனுடைய வாழ்க்கையின் பல் வேறு துறைகளிலும் சமயத்தின் மாரு முத்திரை பதிந்து விளங்கவேண்டும். அப்பொழுதுதான் மனிதன் முழுமனிதனுகிருன். அவன் கடவுள் விரும்பும் பொருளுமாகிருன்.

உலகம் விரிந்தது; பரந்துபட்ட பரப்புடையது; சிந்தனே வேறுபாடுகள் உடையது; மொழி வேறுபாடுகள் உடையது; சமயங்களின் வேறு பாடுகளும் உடையது; வேறுபாடுகள் உண்டாயினும் உயிர் ஈடேற்றம் என்ற இலட்சிய ஒருமைப்பாடு உலகத்திற்கு உண்டு. எல்லா மொழிகளுக்கும், எல்லாச் சமயங்களுக்கும் இலட்சியம் ஒன்றேயாம். அதனே அணுகும் முறைகளிலேயே தான் வேறுபாடு. இந்த வேறு பாடுகள் தவிர்க்க முடியாதவை. இவை வேறு பாடுகளே தவிர மாறுபாடுகளல்ல. வளர்ச்சியின் படிமுறைகளேயாம் இவைகளுக்குள் சமரசம் வேண்டும். சமரசம் என்ருல் கலப்படம் செய்வதென்னும் பொருளன்று. இன்று சிலர் சமயத் தத்துவக் கலப்படம் செய்கிருர்கள். உணவுக் கலப்படத்தைவிடத் தத்துவ அறிவுக் கலப்படம் மிகவும் கொடுமையானது; கலப்படம் உயிர் விளக்கத்தைத் தடைசெய்யும்.

தெளிவில் தோன்றுவது தத்துவ விளக்கம். தத்துவ விளக்கத்தில் தோன்றுவது இறையருளின் இன்பக் காட்சி. இதனே, "சிந்தையுள் தெளிவுமாய், தெளிவினுள் சிவமுமாகி" என்று அருள் நூல் எடுத்துக் காட்டுகிறது. வளர் நெறிகளின்மாட்டு வெறுப்பின்றி உயர் நெறியிடத்து விருப்பம் காட்டுவதே முறை. சிறந்த வாழ்க்கை நெறிகள் பலவுண்டு. காலத்திற்குக் காலம் நெறிகள் வளர்ந்து வருகின்றன. இதனே "நெறியெல்லாம் புலம் ஆக்கிய" என்ற மணிவாசகர் மணிமொழியால் உணரலாம். உலகில் எல்லாச் சமயங்களும் சிறப்புடையனவேயாம், அவற்றில் ஏதொன்றும் தாழ்ச்சி யுடையதன்று. அவை மனித உலகத்திற்குச் செய்திருக்கின்ற சேவைகள் நினைந்து நினைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து, வாழ்த்துதற்குரியன.

ஆயினும் தத்துவ வளர்ச்சியிலும் தத்துவப் பார்வையிலும் தமிழகச் சித்தாந்தச் சமயநெறி உயிர்ப்புடையதாக விளங்குகிறது. சித்தாந்தம் என்ருலே முடிந்த முடிபு என்று பொருள். இனி மேல் வினக்கள் எழுப்ப முடியாத அளவுக்குத் தத்துவத் துறையிலும் வாழ்க்கை முறையிலும் முழுதுற வளர்ந்த நெறி சித்தாந்த சைவமே. செந்தமிழ்க் குமரகுருபர அடிகளும் "ஒரும் வேதாந்த மென்ற உச்சியிற் பழுத்த"—என்று இதனைப் பாராட்டியுள்ளார்கள். இங்ஙனம் கூறுவது சார்பின் காரணமாக எழுந்த பற்றினலன்று. உண்மையிலேயே அறிவின் அடிப்படையிலும் வாழ்க்கை இயலிலும் வைத்து ஆராய்ந்தால் சிவநெறி சிறந்து விளங்குமுண்மை எல்லார்க்கும் நன்கு பெறப்படும்.

## சிவநெறியின் சிறப்பியல்புகள் :

உலகின் பல்வேறு சமயங்கள் உயிரைத் தனித்த—ஒரு நிலைத்த பொருளாக எடுத்துக் கொள்ளவில்லை. உயிர்கள் கடவுளால் படைக்கப்பட்டன. என்று கூறும் சமயங்களே மிகுதி. அந்தச் சமயங்களெல்லாம் கடவுள் எங்கும் நிறைந்தவரென்றும், பேரறிவு பேராற்றல் உடையவர் என்றும், பூரண கருணையுடையவர் என்றும், பூரண நல்லவரென்றும் கூறுகின்றன. ஒரு நன்மையிலிருந்து தீமை தோன்றுதல் இயற்கைக்கு முரண் தீமை நீங்கப் பெற்று அதனல் நன்மை வளரலாம். இது பரிணும வளர்ச்சி. குற்றங்களும் குறைகளும் உடைய உயிர்களைப் பார்க்குங்கால் இ஁து இறைவனுடைய படைப்பு என்று ஏற்றுக்கொள்ள மனம் கூசுகிறது.

இந்திய நாட்டில் இந்து சமயம் என்ற மயக்கில் மேலோங்கி வளரும் சமயத்தில் சீவனே சிவன் என்ற கருத்து கூறப்படுகிறது. அதுவும் எவ்வளவு ஆபத்தானது என்பதை எண்ணிப்பாருங்கள். உயிர்கள் படைப்புப் பொருள்கள் அல்ல, என்றும் இயல்பாயுள்ள அழிவில் பொருள்கள் என்பது சிவநெறியின் கருத்து. இந்தக் கருத்து அறிவியலுக்கும் இசைந்த கருத்து. சிவநெறி உயிர்கள் உள் பொருள்கள் என்று கூறிய தோடன்றி, அவை அன்பு அறிவு, ஆள்வினையுடைய பொருள்களென்றும் கூறுகிறது. இயற்கையிலேயே ஆணவ அழுக்குடன் உயிர் பிணைந்து இருப்பதன் காரணமாக அன்பு, அறிவு, ஆள்வினே விளங்குவதற்கு இடமின்றி மறைக்கப்பட்டிருக்கிறது.

அன்பும், அறிவும், ஆள்வினைகளும் உடைய உயிர்கள் குற்றங்களுடையனவாக இருப்பதற்குக் காரணம் காட்டுகிறது சைவம். நிலம் விளையும். ஆனலும் அது கெட்டித் தன்மையுடையதாக இருக்கிறது. கெட்டித் தன்மையை உழுதலாலும், தண்ணீர் கொண்டு நனைத்தலாலும் நிலம் நெகிழ்ந்து விளையும்; பயன் தரும். அதுபோல உயிரொடு இயற்கையாகப் பிணைந்துள்ள அழுக்கின் ஆற்றலைத் திருவருள் துணையால் மாற்றிஞல், தன்னறிவும் ஆற்றலும் விளக்கமுறுதலோடு உயிர் பேரறிவும் பெற்று வாலறிவன் நற்ருள் தொழுதின்புறும் வாய்ப்பினை எய்துகிறது. இந்த வகையிலேயே இறைவனுக்கும் உயிருக்கும் தொடர்பேற்படுகிறது. இறைவனும் என்றும் உள்ள உள்பொருள்; இயல்பிலேயே பேரறிவினன்; மாசற்றவன்; இன்பமே வடிவானவன்; உயிர்களை மறைத்து நிற்கும் மல ஆற்றலை அகற்றக் காரண மாயையினின்றும் பெருங் கருணையின் வடிவமாகிய இறைவன் உலகு உடல் உறுப்பு உண் பொருள்களாகிய காரியமாயையையும் தொன்மை வினையென்னும் வினைத் தன்மையையும் அவ்வுயிர்களுடன் இயைத்தனன்.

இந்த இயைப்பையே இறைவனின் படைப்பு என்று சைவம் கூறுகிறது. நுண்ணுடலாவது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், என்னும்

பூதமுதலாகிய தன்மாத்திரை ஐந்தும், மனம் எழுச்சி (அகங்காரம்) இறுப்பு (புத்தி) என்னும் அந்தக் கரணம் மூன்றும் ஆக எட்டுக் கருவி களாலாயது.

உயிர்கள் இறைவன் தந்தநுகர் பொருள்களை அவனருளால் நுகர்ந்து வேட்கை தணிந்து அவ் வழி மல ஆற்றல் அடங்கித் தன்னறிவு பெற்று விளங்கி இறைவனை நினைந்து வாழ்த்தி என்றும் மாறாத இன்ப அன்பு நிலையினைப் பெற்று எந் நாளும் இன்புறுகிறது. இதுவே சிவநெறியின் உயிர் வரலாற்றுச் சுருக்கம் இந்தச் சிறந்த கொள்கை அறிவியல் வாதிகளுக்கும் இயைந்த தாகவே அமைந்திருக்கிறது. உலகியல்ஒழுக்க நியதிகளுக்கும் மிகவும் இயைந்ததாகவே விளங் குகிறது.

## சிவநெறித் திருமுறைகள் :

உலகின் மிகப் பழைய சமயங்களுள் ஒன்று சிவநெறி. இல்லை, தொன்மைசான்ற. இன் றைய மனித அறிவு எல்லைகாணும் வரலாற்று அறிவின் மூலமுதலாகவிளங்கும் நெறி சிவநெறி. மண்ணில் மறைந்து போன சிந்து வெளிச் சீமை யின் நாகரிகம் இதற்கு எடுத்துக்காட்டு. தொல் காப்பியம், திருக்குறள் முதலாகச் சிறந்த சங்க இலக்கியங்கள் ஈறுக உள்ள பழைய இலக்கிய இலக்கணங்கள் சிவநெறியின் சீர்மையையே பேசுகின்றன. எனினும் சிவநெறியின் ஆழ்ந்த அனுபவ வெளியீடுகளாகத் தோன்றியவை திரு அருள் திருமுறைகளே.

திருமுறைகள் இனிய எளிய தமிழில் அமை ந்துள்ளன. மனித குலத்தின் உணர்வை வளம் படுத்தி உலகுய்யச் செய்யும் சக்தி பெற்றவை திருமுறைகள். தந்தையும் தாயுமாய ஈசனை நந் தம் இறைவனை வேண்டியவாறு மண்ணிற் கழைத்து நடமாடச் செய்யும் ஆற்றலுடையன திருமுறைகள். திருமுறைகள் திருவருளின்பச் சுவையினை வழங்கி இன்பம் பெருக்கும் இயல் பின. திருமுறை நெறி இனிய நெறி ; பழைய நெறி, புதுமைக்குப் புதுமையான நெறி ; பொது மைநெறி : அதற்கு ஈடான ஒரு நெறி இன்று வரை மக்கள் பேசும் வேறு எம்மொழியிலும் தோன்றவில்லை. சிவநெறிச் சமயத்தைப் பிற சமயங்களின் தத்துவங்களோடு ஒப்பு நோக்கி விவாதித்துப் பிற சமயங்களின் செழுமையின் மையை உணர்த்தி, சிவநெறியின் சிறப்பினை நிலை நிறுத்தத் தோன்றியவை சித்தாந்த சாத்திரங் கள். தமிழர் வாழ்வியலில் தழைத்துச் செழித்த செந்நெறி சிவநெறி ; காலத்தால் முந்திய நெறி; காலத்தைவென்றிருக்கும் திறனுடையதிருநெறி

## சமய சமரசம் :

இன்று உலகம் ஒன்றெடொன்று நெருங்கிக் கொண்டிருக்கிறது. காலத்தையும் தூரத்தை யும் மனிதன் வென்றிருக்கிறான். 'ஒன்றே குல மும் ஒருவனே தேவனும்' என்ற திருமந்திரத் திருமொழி குருகுலத்திற்கு வித்திட்டிருக்கிறது. ஆனாலும் உலகிடைப் பல சமயங்கள் பள்ளி வகுப்புப் போல் நிலவுகின்றன. எல்லாச் சம யங்களுடைய நோக்கமும் மனித குலத்தை மேம்பாடடையச் செய்வதுஎன்பதுதான். இதனை ''இன்பம் பெருக்கி இருளகற்றி எஞ்ஞான்றும் துன்பம் தொடர்வறுத்து'' என்ற திருவாச கம் எடுத்துக்காட்டும்.

ஐம்பூதங்களின் தொடர்புடைய அறிவியற் கலையைப் 'பூத இயல்'என்று சொல்கிறோம். அது போலவே உயிரியலை ஆராய்ந்து, உரிய நெறி காட்டி உறுபயன் நல்கும் ஒருநெறியை அருளி யல் என்றாலும் சமயம் என்றாலும் ஒன்றேயாம். அறிவியல், ஆய்விலும் சோதனைச் செயலிலும் தவறுகள் நிகழுமாயின் உரிய பயனென்றும் கிட் டாது. அதுபோலவே உயிரியல் அறிவிலும் அஃதாவது சமய இயலிலும் பிழைபட்ட கருத் தோ செயலோ காணின் அருளியல் அனுபவ மும் கிட்டாது ; ஆன்ம ஈடேற்றமும் கிடைக் காது. ஆதலால் சமயத்துறையில்ஏனோதானோ என்னும் மனப்போக்குக் கூடாது

சமய சமரசம் என்பது தத்தம் சமய நெறி யில் ஆழ்ந்த பற்றும், தோய்ந்த அனுபவமும் கொள்ளுதல். அதே நேரத்து பிற சமயங்க ளிடத்தில் வெறுப்புணர்வின்றி ஈடுபாடுகளைக் காட்டுதல் இத்தகைய சிறந்த நல்ல சமரச உணர்வு, நம்மிடையே நன்கினிது மலர்ந்து பரவி வளர்தல் வேண்டும்.

வழிபாடு என்பது உயிர் குறைகள் நீங்கி நிறைநலம் பெற்று ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த அன்பினில் விளைந்த இன்ப ஆரமுதை நுகர்ந்து இன்புறுதலையே நோக்கமாகக் கொண் டது. ஓர் எல்லையிலிருந்து இன்னொரு எல்லை க்கு நம்மை அழைத்துச் சென்று சேர்க்கும் பாதையினை உலகியலில் வழி என்றே கூறு கிறோம். அதுபோலக் கருக்குழி எல்லையிலிருந்து ஆரா இன்ப அமுத எல்லைக்கு அழைத்துச் செல் வது வழிபாடு. இருளடர்ந்த சூழலிலிருந்துமீட்டி நம்மை ஒளியும் தெருளும் நிறைந்த எல்லைக்கு அழைத்துச் செல்வது வழிபாடு.

அறியாமையிலிருந்து, மேலாம் ஞான எல் லைக்கு அழைத்துச் செல்வது வழிபாடு. பயணம் செய்பவர்கள் பாதத்தைப் பாதையில் ஊன்றி, சேரவேண்டிய எல்லையை நோக்கி அடிஅடி யாக முன்னேற வேண்டும். கடந்த தூரம் பெருகிக் கடக்க வேண்டிய தூரம் குறு கிக் கடைசியில் எல்லையினை அடைதல் களிப் பூட்டும். அதுபோல அறியாமை தேய்ந்து அல் லல் நீங்கி அழியா இன்பம் பெருக நம்முடைய பேரின்பவைப்பாக இருக்கிற இறைவனின் இணை யடிகளைச் சார்ந்து இன்புறுவது வழிபாடு.

வழிபாடு இறைவனை நினைந்து செய்யக்கூடி யது ஆயினும், இறைவனுக்காக அன்று. சோற் றினைக் கருதிப் பேணி வேகவைத்தாலும் சோறு சோறாக இருப்பதற்கு அன்று அல்லது சோறு பெருமையுற வேண்டுமென்பதற்காகவும் அன்று. சோறு ஒருவனின் வயிற்றுப் பசிக்கேயாம். அது போல உயிர் இறைவனை நினைந்து வாழ்த்துதல் இறைவனின் நிறைநலன்களைப் பெற்று அவனு— னுடன்கூடி இன்புறுதலுக்கேயாம். இரண்டும்

நாலு என்று எப்படிக் கணக்கில் விடை தப்பா மல் கிடைக்குமோ, அதுபோலவே வழிபாட்டி லும் பயன்தப்பாமல் கிடைக்கும். இஃதுஉண்மை

'ஒன்றியிருந்து நினைந்து பித்தருக்குப் பத்த ராகி அரும்பொடு மலர் கொண்டாங்கே, ஆர் வத்தை உள்ளே வைத்து விரும்பிநல் தூப தீபம் விதியினால் இடவல்லார்க்குக் கரும்பினுள் கட்டி போல்வார்' என்று அப்பரடிகள் அறுதியிட்டுக் கூறுகிறார். பல இடங்களில் திருஞான சம்பந் தர் 'யாதும் ஐயுறவு இல்லை' யென்றும் 'ஆணை நமதே' என்றும் உறுதியாக அருளியுள்ளார்கள். 'வேண்டமுழுதும் தருவோய் நீ'என்றார் மாணிக் வாசகரும். ஆங்கிலக் கவிஞன் டென்னிஸ னும் "உலகோர் கனவிலும் பெறமுடியாத மிகு நலங்கள் பலவற்றைப் பிரார்த்தனை கொண்டு வந்து சேர்க்கும்" என்றான்.



### திருக்கோயில் :

தமிழினத்தின் சமய வாழ்வியலில் திருக் கோயில் மிகவும் சிறப்பானதோர் இடத்தைப் பெற்று விளங்குகிறது. தமிழினம் வரலாற்று அறிவிற்கெட்டிய முற்காலம் தொட்டே இறை வனைக் கைப்பொருளாகக் கண்ணுக்கினிய பொருளாக ஏற்றுத் திருக்கோலத் திருமேனி அமைத்து வழிபட்டு வந்திருக்கிறது. எந்த ஒரு சிந்தனைத் தத்துவத்துக்கும் சின்னமும் சடங்கும் இன்றியமையாதன. ஒரு கருத்தின் பரிணாம வளர்ச்சியே சின்னத்திலும் சடங்கிலும் கொண்டுபோய் விடுகிறது. நம்முடைய சமயச் சார்பிலுள்ள சின்னங்களை—சடங்குகளைக் கண் டிக்கின்ற பிற சமயங்களும் கூட சின்னங்கள் சடங்குகளிலிருந்து முற்றிலும் விடுபட்டவை அல்ல என்பதை நாம் அறிந்து கொள்ள வேண் டும். ஏன்? பகுத்தறிவுவாதிகளும் கூட இதற்கு விலக்கல்லர். தம்முடைய சிந்தனையைக் கருத் தைப் புறத்தே வெளிப்படுத்த மற்றவர்க்கு உணர்த்த தம்முடைய உணர்வை நிலைநிறுத்திக் கொள்ளச் சின்னங்களும் சடங்குகளும் பெரிதும் துணை செய்யும் என்றேகொள்கின்றனர். இஃது ஓரளவு வளர்ந்தவர்களுக்கு. வளர வேண்டிய வர்களுக்குச் சின்னங்கள் சடங்குகளின் வாயிலா கவேபெறவேண்டிய உணர்வைப்பெற முடியும்.

திருக்கோயில் வழிபாட்டில் நம்முடைய சமுதாயம் மிகவும் சிறப்புற ஓங்கி வளர்ந்தது. சங்க காலத்திலேயே நகரமெனக் கருதத்தக்க பெருங்கோயில் இருந்ததாகப் புறநானூறு பேசு கிறது. தமிழகத்தை ஆண்ட பேரரசர்கள் தாம் வாழ்ந்த மனைகளைக்கூட வளமனைகளாகப் பெரும்பாலும் எடுக்க வில்லை. குடிமக்களோடு குடிமக்களாக ஒன்றித்து வாழ்ந்த அவர்களு டைய எளிமையை என்னென்று கூறிப் பாராட்டு வது? ஆயினும் இந்த உலகுக்கு அம்மையப் பராக விளங்கும் இறைவனுக்கு விண்ணளந்து காட்டி வெவ்வினை நீக்கிவேண்டியவரம்கொடுக் கும் கோயில்கள் நிறைய எடுத்தார்கள்.

திருக்கோயில் வழிபாடு நமக்கு இன்றியமை யாதது. நமது உணர்வுபரபரப்பானது; சென்ற சென்ற இடங்களில் செல்லும் இயல்புடையது. இதனை இழுத்துப் பிடித்து நிறுத்தி உணர்வு கலந்த வழிபாட்டில் ஈடுபடுவதற்குத் திருக் கோயிலே ஏற்ற இடம். உயிர்கள் உந்தி உயர் வதற்கு உற்றதுணையாக இருப்பன ஐம்புலன் களைப்பற்றி இன்புறும் ஐம்பொறிகளேயாம். இவற் றில் ஒன்று வழிபாட்டில் ஈடுபட்டுப் பிறிதொன்று ஈடுபடாது போனாலும் பலனில்லை. இந்த ஒரு மைப்பாட்டினை உருவாக்கும் ஆற்றலும் சூழலும் உடையது திருக்கோயில். திருக்கோயில் வழி பாடு நமது வழி வழி மரபு. அதனாலன்றோ அப் பரடிகள் திருக்கோயில் சூழ்தலை உடன்படுமாறு வற்புறுத்த 'ஒரு காலும் திருக்கோயில் சூழா ராகில்...' என்று திருக்கோயில் சூழாதாரை உறவுகொள்ள மறுக்கிறார்.

### திருமுறைகள் :

தேவரெலாம் தொழும் தேவன் நம் தலைவன். 'தமிழோடிசை கேட்கும் இச்சையால் காசு நித் தம் நல்கினான். மொழிக்கு மொழி தித்திப்பான மூவர் சொல்லும் தமிழ் கேட்டான்; தண்ணளி சுரந்தான். இன்றோ இறைவனுக்கும் நமக்கும் இசைவை உருவாக்கச் சக்தியற்ற அருச்சனை முறைகளே நடைமுறையிலிருக்கின்றன. சிவச் சிந்தனையில் நாம் வளரவேண்டும் என்று விரும் பும் அனைவரும் திருக்கோயில்கள் அனைத்திலும் திருமுறை அருச்சனையே நடைபெறச் செய்ய வேண்டும்.

சிவபிரான் பண் சுமந்த பாடற் பரிசுபெறக் கலி மதுரையில் மண் சுமந்தான். சுந்தரரின் சுந்தரத் தமிழ்ப் பாட்டுக் கேட்டு மகிழ்ந்ததில் சேரமான் பூசனைக்குச் செல்லும் செயலையும் மறந் தான். பெண்ணும் பொன்னும் பெருஞ்சோறுஞ் சேர்த்துக் கொடுத்துச் செந்தமிழ் கேட்டான். அப்பரடிகளின் அமுதத் தமிழை ஆர்ந்து அநு பவிக்க அவர் தம் உரிமையாகிய வீடும் அப் பொழுதே கொடுக்க வேண்டியும் காலம் தாழ்த்தினான்.

திருமுறைகள் காட்டும் வழிபாட்டு நெறி முறைகள், திருக்கோயில்களில் மிகுதியும் இடம் பெறவேண்டும். நமது வழிபாட்டு முறையில் இறைவனுக்குப் பூவும் நீரும் மிகவும் உரியன. தூபமும் தீபமும் உரியன ; இவற்றொடு நெஞ்சை நெகிழச் செய்யும் பண்ணிசையும் தேவை. இவை தம்மொடு இன்றியமையாது தேவைப் படுவது நெஞ்சும் ஆகும். இவைகொண்டு நிகழ்த்துவதே உண்மையான வழிபாடு.

ஆதலால் எல்லோருக்கும் எளிமையிலிய லும் பூவும் நீருமிட்டு நால்வர் தந்த நற்றமிழால் பாடி வழிபாடு செய்தலேசிறந்த வழிபாடு. இதற் குரிய சூழல் உருவாக வேண்டும் என்பது நமது ருபவிருப்பம். வழிபாடு, சமயத்திற்கும் சமுதா யத்திற்கும் நலம் பயப்பது ; மிக மிக இன்றியமை யாதது.

